

# ஆகாமிய ©

# கர்மா

**ஸ்ரீ பகவத்**

ஞானியர் பலரை உருவாக்கியவர்

◆ நூலின் பெயர் : **ஆகாமிய கர்மா** ◆ ஆசிரியர் : **ஸ்ரீ பகவத்**

◆ பதிப்பு : முதற் பதிப்பு டிசம்பர் 2010

◆ வெளியீடு : **Nithyapravaaham Publication**

31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003.

Cell : 99942 05880, 97891 65555

◆ விலை ₹ **60/-**

◆ வடிவும் - அச்சும் : ஸ்நேகா பிரிண்டர்ஸ்.

2/2, தீபம் காம்ப்ளக்ஸ், மெயின் ரோடு, சாத்தூர். Cell : 94430 12170

◆ நூல் விநியோகம் : **நித்யப்ரவாகம் பப்ளிகேசன்**

**31, ராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 636 003.**

**Cell : 99942 05880, 97891 65555**

---

10-2

 

## பதிப்புரை

ஆன்மீக சாதகர்கள் அனைவரும் ஞானம் அடைவதற்கான எளிய வழியைக் காட்டி விட்டார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

ஆனாலும் ஆன்ம சாதகர்கள் அனைவர் நெஞ்சிலும் இடைவிடாது கர்மாவைப் பற்றிய கேள்விகள் எழுந்து கொண்டே இருக்கின்றன.

எதையும் ஏற்றுக் கொள்ளும் மனோநிலை வந்தவர்களுக்கு கர்ம பந்தம் எதும் இல்லை.

ஆயினும் கர்மா பற்றிய கேள்விகள் பலதரப்பு வாசகர்களிடமிருந்தும் வந்து கொண்டேயிருக்கின்றன.

கர்மா, கடவுள், பரிகாரம் என்னும் சுற்று வட்டப்பாதையைப் பற்றிய அறிவியல் பூர்வமான, தர்க்க ரீதியான அணுகுமுறையை அனைவருக்கும் பயன்படும் வகையில் ஐயா இந்நூலில் விளக்கியுள்ளார்.

இந்த நூல் சமுதாய மாற்றத்திற்கே வழிவகுக்கும் என்று முழுமையாக நம்புகிறோம்.

## விபரங்களைப் பெற

Website Address : www.nithyapravaaham.org

E-mail ID : jeevamani@nithyapravaaham.org

முகவரி

திரு. N. கைலாசம் 94432 90559

திரு. V.A.P. சரவணன் 99942 05880

திரு. K.S. ஜீவமணி 97891 65555

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை,

சேலம் - 636 003.

## ஆசிரியர் அறிமுகம்

ஸ்ரீ பகவத் அவர்கள் தனது பதினெட்டாவது வயதிலிருந்தே ஆன்மீகத்தில் நாட்டம் கொண்டவர். இவர் 40 ஆண்டுகளாகக் கடும் முயற்சியை மேற்கொண்டு ஞானத்தைத் தேடினார். கிடைக்க வில்லை. அவரது 58 வயதில் திடீரென ஒருநாள் ஞானத்தெளிவு ஏற்பட்டது. பல வருட முயற்சியில் கிடைக்காத ஞானத் தெளிவு திடீரென்று கிடைத்தபோதும் அவர் மகிழ்ச்சியில் ஆனந்தக் கூத்தாடவில்லை. மாறாக ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனார். அரை நொடியில் புரிந்துகொள்ள வேண்டிய இந்த ஞானத்திற்காகவா நாற்பது ஆண்டுகள் அரும்பாடுபட்டோம் என்று வியப்புற்றார். ஞானம் பெறுவதற்குப் பெருமுயற்சி தேவையில்லை என்பதை அறிந்தார். தான் பெற்ற இன்பத்தை - ஞானத்தை இவ்வையகமும் பெறவேண்டும் என்ற அடிப்படையான உணர்வோடு அனைவருக்கும் வழிகாட்டி வருகிறார்.

**அரங்கநாதன்** M.A.,M.Ed.,
தமிழாசிரியர் (ஓய்வு)
ஸ்ரீ சாய் நிவாஸ், திருச்செந்தூர்.

10-2





# பொருளடக்கம்







# கர்ம வினை ?

விதியை வெல்ல முடியுமா? எல்லாமே விதிப்படிதான் நடக்குமா?

...... இப்படி ஒரு கேள்வியை ஆன்மீகத்தோடு தொடர்பு கொண்ட பெரும்பாலோர் எழுப்புகின்றனர்.

ஆன்மீகத்துக்கும், விதி, கர்மா போன்றவைகளுக்கும் தொடர்பு கிடையாது என்ற அணுகுமுறையைப் பெரும்பாலோர் ஏற்றுக் கொள்வதில்லை.

விதி, கர்மா ... இவைகள் என்னதான் கூறுகின்றன என்பதையும், ஆன்மீகத்தின் பார்வையில் புரிந்து கொள்வது, ஆன்மீகத்தின் அடித்தளமாக இருந்து, உதவி செய்யும் என்பதில் ஐயமில்லை.

வேடிக்கையாக ஒரு கதையைக் கூறுவதுண்டு.

கடலில் ஒரு கப்பல் அமைதியாகப் பயணம் செய்து கொண்டிருந்தது. எல்லோரும் அவரவர்களுக்குப் பிடித்தமான கேளிக்கைகளில் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தனர்.

எதிர்பாராத நிலையில், திடீரென, புயலும், கடல் கொந்தளிப்பும் ஏற்பட்டது. எந்த நிமிடத்திலும் கப்பல் புரண்டு கவிழ்ந்து விடலாம் என்ற நிலையில்,

கடலில் எழுந்த ராட்சச அலைகள், கப்பலைப் பந்தாடின.

கேளிக்கைகளில் ஈடுபட்ட அனைவரும், சீரியஸ் ஆகி விட்டார்கள். ஒவ்வொருவரும், அவரவர் இஷ்ட தெய்வங்களின் தீவிர பக்தர்களாகக் காட்டிக் கொண்டார்கள்.

அந்த பயணிகளில், பெரிய வியாபாரி ஒருவரும் இருந்தார். அவரும் தீவிரமாகப் பிரார்த்தனை செய்தார். ஏனெனில் எந்த நிமிடத்திலும், பயணிகள் அனைவரும் தழுவிடக் கூடிய மரண பயங்கரம் அங்கே நிலை கொண்டிருந்தது.

அந்த வியாபாரி, உண்மையான பயபக்தியுடன் இறைவனை வேண்டினார்.

*"இறைவா, என்னை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்று! என்னுடைய பெரிய பங்களாவை விற்று, உன் கோயில் உண்டியலில் காணிக்கையாகப் போட்டு விடுகிறேன்."*

 

அவர் இப்படி வேண்டிக் கொண்டார்.

அவர் இரண்டு பங்களா வைத்திருந்தார். அதில் ஒன்றை மன்னருக்கு விலை பேசிக் கொண்டிருந்தார். பலகோடி ரூபாய் பெறுமதியுள்ள அந்த பங்களாவை, இறைவனுக்கே காணிக்கையாக்க முடிவு செய்து, தனது பிரார்த்தனையைத் தெரிவித்தார்.

அவர் வேண்டியபடியே புயலும் நின்று விட்டது. அலைகடலும் அமைதியாகி விட்டது.

இப்போது வியாபாரி சங்கடப்பட ஆரம்பித்தார். கோடிக்கணக்கில் இழப்பு ஏற்பட்டு விட்டதே. நாம் வேண்டிக் கொள்ளாவிட்டால் கூட புயல் ஓய்ந்திருக்குமோ? அன்று இரவு முழுவதும் அவருக்கு சரியான தூக்கம் இல்லை.

ஆனால் மறுநாள் அவர் தனது நாட்டுக்குள் அடியெடுத்து வைக்கும் போது தெம்பாகி விட்டார்.

அவருடைய பங்களாவை விற்க விலை பேசி வந்தார்.

ஆனால் வீட்டோடு சேர்த்து நாய்க் குட்டி ஒன்றையும் விற்பதற்கு விலை பேசினார்.

'வீட்டின் விலை வெறும் ஆயிரம் ரூபாய்தான். ஆனால் நாய்க்குட்டியின் விலை மட்டும் மூன்று கோடி ரூபாய்'.

தனித்தனியாக விற்க மறுத்து விட்டார்.

ஆனால் அந்த வீட்டின் விலை தாராளமாக மூன்று கோடிக்கு அதிகமாகப் பெறும். ஆகவே நாய்க் குட்டியுடன் சேர்த்து வீட்டை ஒருவர் விலைக்கு வாங்கிக் கொண்டார்.

அந்த வியாபாரியும் வீட்டின் விலையான ஆயிரம் ரூபாயை, இறைவனுக்குக் காணிக்கையாக செலுத்தி விட்டார். சொன்ன சொல்லைக் காப்பாற்றி விட்டார்.

நாய்க் குட்டியின் விலையான மூன்று கோடி ரூபாயைத் தனதாக்கிக் கொண்டார்.

இப்படி ஒவ்வொருவரும் தங்களுடைய கர்ம வினையிலிருந்து விடுபடுவதற்காகப் பரிகாரங்கள் பலவும் ஏற்பட்டு விட்டன.

நமக்கு வேண்டிய நன்மைகளை, நாம் இறைவனைப் பிரார்த்தனை செய்து அடைந்து விடுவதாகவும், அதற்கு நன்றிக் கடனாக நாம் ஏதாவது பரிகாரத்தையோ, காணிக்கையையோ, நேர்த்திக் கடனாகச் செய்து விடுகிறோம்.

ஒருவர் மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. அவர் நீதிபதி முன்பு விசாரணைக்கு ஆஜர் செய்யப்பட்டுள்ளார்.

அவர் நீதிபதியிடம் பணிவாகக் கூறுகிறார்.

*“ஐயா நீதிபதி அவர்களே! நீங்கள் எனக்கு கடவுளைப் போன்றவர். நான் குற்றம் செய்தது என்னவோ உண்மைதான். நீங்கள்தாம் பெரிய மனது செய்து என்னை*

 

*மன்னித்து விடுதலை செய்ய வேண்டும். எனது சொத்தில் பாதியை நான் உங்கள் பெயருக்கு எழுதிக் கொடுத்து விடுகிறேன். அரசாங்கத்துக்கும் ஒரு தொகையை அபராதமாகச் செலுத்தி விடுகிறேன். எங்கள் குடும்பத்துக்கே உங்களைக் குல தெய்வமாக ஏற்றுக் கொள்கிறேன். நீங்கள்தாம் என்னைக் காப்பாற்ற வேண்டும்.*"

அவர் எப்படி வேண்டுமானாலும் பேசலாம், கேட்கலாம், வேண்டிக் கொள்ளலாம். ஏனெனில் அவர் கைதியாக இருக்கிறார். அவர் இப்படி எது வேண்டுமானாலும் கேட்கலாம்.

ஆனால் அந்த நீதிபதியின் நிலை என்ன?

"*குழந்தாய் உன்னுடைய பிராத்தனையை ஏற்றுக் கொண்டேன். நீயும் சொன்ன வாக்கைக் காப்பாற்று. உன்னை விடுதலை செய்கிறேன்*", என்று அவரால் கூற முடியுமா?

எத்தனையோ விதமான அரசியல்வாதிகள் இருக்கிறார்கள். எத்தனையோ விதமான அதிகாரிகள் இருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட சிலரை அணுகி, அவர்களுடைய துதி பாடியவர்களுக்கெல்லாம், அவர்கள் அருள் கடாட்சம் வழங்குகின்றார்கள். அவர்களோடு நாம் முரண்படும் பட்சத்தில், அவர்கள் நமக்கு வேண்டாதவை களையெல்லாம் செய்து விடுவார்கள்.

பிழைக்கத் தெரிந்தவர்கள் அவர்களைத் துதித்துப் பிழைத்துக் கொள்கிறார்கள். பிழைக்கத் தெரியாதவர்கள் , அவர்களைப் பகைத்து கொள்கிறார்கள்.

இதே அணுகுமுறைதான், தெய்வங்களைப் பொருத்தும் உள்ளதா?

இறைவன் மீது துதிபாடி, இறைவனிடம் பிரார்த்தனை செய்யும் போது,

இறைவனும் இவ்வாறு நமக்கு அனுகூலங்களைச் செய்வாரா?

இறைவனைப் பழிப்பவர்களை, இறைவன் துன்பப் படுத்துவாரா?

இறைவனும், அரசியல்வாதிகளைப் போன்றும், சர்வாதிகாரிகளைப் போன்றுந்தான் செயல்படுவாரா?

நமக்கு நல்ல பலன்கள் கிடைக்க வேண்டுமானால், நாம் இறைவனிடம் பிரார்த்தனை செய்து, இறைவனை மகிழ்விக்க வேண்டுமா?

இந்த வேடிக்கைக் கதையை நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாம்.

ஒரு புலவர், தனது வறுமையைப் போக்கும் நோக்கத்தில் மன்னர் ஒருவரைச் சென்று பார்த்தார்.

மன்னனைப் புகழ்ந்து ஒரு கவி பாடினார்.

"*தானம் செய்வதில் உனக்கு நிகர் நீயே*" என்று புகழ்ந்து பாடினார்.



மன்னனும் மகிழ்ந்து, "*உமது கவி, மிகவும் அற்புதமானது. இதற்கு ஆயிரம் பொன் பரிசளித்தால்தான் சரியாகும்*" என்று கூறினார்.

அந்தப் புலவர் மேலும் மன்னனைப் புகழ்ந்தார்.

"*மழை மேகங்கூட தேவையற்ற இடங்களி லெல்லாம் கூட மழையைப் பொழிந்து விடும். ஆனால் தேவையறிந்து கொடுக்கும் நீ, வான் மழையினும் சிறந்தவன்*" என்று அவர் மன்னனை வெகுவாகப் புகழ்ந்தார்.

இப்படி அவர் புகழப் புகழ, மன்னனும், பரிசில் தொகையைக் கூட்டிக் கொண்டே போனான்.

பரிசுத் தொகை ஒரு லட்சம் பொன் வந்து விட்டது. இவ்வளவு கிடைத்தால் போதுமென்று, புலவரும் தனது புகழ்மொழியை நிறுத்திக் கொண்டார்.

புலவர் பரிசிலுக்காக காத்திருந்தார். " சரி போய் வாருங்கள்!" என்று மன்னர் அவரை வழியனுப்பி வைத்தார்.

" பரிசில் ......" என்று மெதுவாக இழுத்தார் புலவர்.

" *ஓ, அதுவா? நீர் என்னை மகிழ்விக்க ஏதேதோ சொன்னீர். நான் உம்மை மகிழ்விக்க ஏதேதோ சொன்னேன். இரண்டும் சரிக்குச் சரியாகி விட்டது, நீர் போகலாம்*". என்று வழியனுப்பி வைத்தார் அந்த மன்னர்.

இப்படி இறைவனை நாம் பிரார்த்தித்து யாசிக்க வேண்டுமா?

அவராக மனமிறங்கி, நமக்கு வேண்டியதை அவர் செய்ய வேண்டுமா?

பிரார்த்திக்க வேண்டியது நமது கடமை; அருள் செய்ய வேண்டியது இறைவனுடைய கருணை.

... இப்படித்தான் அமைந்துள்ளதா?

அப்படியானால்,

ஊழல் பேர்வழிக்கும், இறைவனுக்கும் என்ன வித்தியாசம்?

சபல புத்தியுள்ள சராசரி மனிதனுக்கும், இறைவனுக்கும் என்ன வித்தியாசம்?

புகழ்ச்சிக்கும், வேண்டுதலுக்கும் மயங்கும், சாதாரண மனிதனுக்கும், இறைவனுக்கும் என்னதான் வித்தியாசம்?

இப்படி,

ஏதோ ஒன்று நெருடுகின்றது. உண்மை இப்படி இருக்க முடியாது என்று தோன்றுகிறது.

அப்படியானால், எதுதான் உண்மை?

இறைவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்புதான் என்ன?

●





## 2

# எல்லாம் அவன் செயல்

"*அவனன்றி ஓர் அணுவும் அசையாது.*"

" *எல்லாம் அவன் செயல்.*"

" *இறைவனே கர்த்தா. நாம் வெறும் கருவியே.*"

" *அவன்தான் நம்மை ஆட்டுவிக்கிறான்; நாம் ஆடுகின்றோம்.*"

" *பொம்மலாட்டத்தின் சூத்திரதாரி அவனே; நாம் வெறும் பொம்மைகள்தாம்.*"

" *அவன்தான் பம்பரத்தைச் சுழற்றும் சாட்டைக் கயிறு; நாம் வெறும் பம்பரம்தான்.*"

" *நமக்கென்று எந்த செயலும் கிடையாது. அனைத்தும் அவன் செயலே.*"

... இப்படி எத்தனையோ வாசகங்கள் உள்ளன.

இவையெல்லாம் உண்மையா?

அவன்தான் நம்மை ஆட்டுவிக்கிறானா?

நாம் வெறும் கருவிதானா?

நமக்கு என்று, சுயமாக எந்தச் செயலும் கிடையாதா?

நாம் விரும்பி எதனையும் செய்ய முடியாதா?

நமது முயற்சிக்கு வாய்ப்பே கிடையாதா?

முல்லா நசுருதீன் கதையொன்றை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்.

தன்னைப் பேரறிஞர் என்று கூறிக் கொண்ட ஒருவர், முல்லா இருக்கும் நகரத்துக்கு வந்தார். அவர் தன்னுடைய அறிவுத் திறத்தை விளம்பரம் செய்து கொண்டார்.

அவர் வெளிப்படையாக அறிவித்தார். "*யார் வேண்டுமானாலும், என்ன கேள்வி வேண்டுமானாலும் கேட்கலாம். என்னால் பதில் சொல்ல முடியாத கேள்வியே கிடையாது. நீங்கள் எவ்வளவு சிக்கலான கேள்வியைக் கூட என்னிடம் கேட்கலாம்.*"

அவர் பகிரங்கமாக அறிவித்தார். அவர் அவ்வளவு உறுதியுடன் கூறுயதால், அனைவரும் அவரிடம் கேள்வி கேட்கத் தயங்கினார்கள்.

அவரிடம் கேள்வி கேட்க முன்வந்தார், முல்லா.



*" எந்தக் கேள்விக்கும் உங்களால் பதில் சொல்ல முடியுமா ?"*

*"நிச்சயம் பதில் சொல்ல முடியும்."*

*"கேள்வி கேட்கலாமா?"*

*"தாராளமாகக் கேட்கலாம். எந்தக் கேள்வியானாலும் தாராளமாகக் கேட்கலாம். உங்களுடைய எந்தக் கேள்வியானாலும் என்னால் பதில் சொல்ல முடியும். எவ்வளவு கடினமான கேள்வியானாலும் பரவாயில்லை. தாராளமாகக் கேளுங்கள்."*

*" திறந்து கிடக்கும் ஜன்னல் வழியாகக் கையை விட்டு, வீட்டுக்காரருக்குத் தெரியாமல், அந்த வீட்டிலுள்ள பொருளை அபகரிப்பது எப்படி என்பதை விளக்கிக் கூற முடியுமா?"* .... முல்லா கேட்டார்.

இப்படி ஒரு கேள்வியைக் கேட்டால், அவர் என்ன பதில் சொல்வது?

களவு செய்வது எப்படி என்று பதில் சொல்வதா?

இப்படித்தான்,

அனைத்துக்கும் காரணம் இறைவன்தான் என்று கூறும் போது, உலகில் நடக்கும் அனைத்துக் கொடுமைகளுக்கும், அனைத்து அநீதிகளுக்கும் அவரே பொறுப்பேற்க வேண்டியவராகி விடுகின்றார்.

ஒருவரை நல்ல நிலையில் ஆரோக்கியமாகப் படைப்பதும், இன்னொருவரை நோயாளியாகப் படைப்பதும் இறைவன்தான் என்றால்,

அது நியாயம் தானா?

ஒருவரை வசதிகளுடன் வாழ வைத்து, இன்பங்களையெல்லாம் அனுபவிக்க வைத்து விட்டு, பலரை துன்பங்களில் துடிக்க வைத்தால் அது நியாயமா?

ஏன் அந்த இறைவனுக்கு, இந்த ஓர வஞ்சனை?

சிலருக்கு வசதி வாய்ப்புகளைக் கொடுத்து விட்டு, பலருக்கு அபவாதம் செய்யும் அவருடைய செயல் சரியானதாக இருக்க முடியுமா?

அவர் ஒரு தர்மவானாக இருந்தால் இப்படிச் செயல்படுவாரா?

அதனால்தான் இறைவன் மறைந்து வாழ்கின்றாரா?

ஒருமுறை, தவ வாழ்க்கை மேற்கொண்டு வாழ்ந்து வரும் முனிவர் ஒருவர் முன்பு இறைவன் தோன்றினார்.

"மகனே! உனக்கு என்ன வரம் வேண்டும்? என்னிடம் கேட்டுப் பெற்றுக் கொள்!" .... இறைவன் அந்த தவசீலரிடம் வினவினார்.

"தேவரீர்! தங்கள் வருகைக்கு மிக்க நன்றி. ஆனால் எனக்கு எதுவும் தேவைப் படவில்லை. அதனால் என்னைத் தாங்கள் மன்னிக்க வேண்டும்." ... இப்படி அந்த தவசீலர் கூறிவிட்டார்.



ஆனால் இறைவன் விடவில்லை.

*"நான் பொதுவாக எவர் முன்னாலும் இப்படி வருவதில்லை. உனது தவத்தினால் மகிழ்வடைந்துதான் உன் முன்னால் வந்துள்ளேன். அப்படி நான் எவர் முன்பாவது வந்தேனானால், வரம் கொடுக்காமல் போவதில்லை. ஆகவே நீ ஏதாவது ஒரு வரத்தைப் பெற்றுத்தானாக வேண்டும்."*

அந்தத் தவசீலருக்கு என்ன வரம் கேட்பது எனத் தோன்றவில்லை. அவருக்குத் தேவையும் எதுவும் இல்லை.

அவரது இடது கணுக்காலில் ஒரு காயத் தழும்பு இருந்தது.

*" இறைவா! தாங்கள் எனக்கு ஏதாவது கொடுத்துதான் தீர வேண்டுமென்றால், அருள் கூர்ந்து எனது இடது காலிலிருக்கும் இந்த காயத் தழும்பை வலது காலுக்கு மாற்றித் தரும்படி வேண்டுகிறேன் ! "*

... இப்படி ஒரு வேண்டுதலை அவர் வெளிப்படுத்தினார்.

இப்போது இறைவனுடைய நிலை சங்கடத்துக்குள்ளாகி விட்டது.

"மகனே ! இதெல்லாம் பிராரப்த கர்மம். இதை மாற்ற என்னால் முடியாது !" என்று கூறிவிட்டு மறைந்து விட்டார்.

புராணக் கதைகளில், இதுபோன்று இன்னுமொரு சம்பவம் விவரிக்கப்படுகிறது.

ஒருமுறை முனிவர் ஒருவர் தனது ஆசிரமத்தில் அமர்ந்து தனது கிழிந்த ஆடையை, ஊசி நூலைக் கொண்டு தைத்துக் கொண்டிருந்தார்.

அவருடைய ஏழ்மையைக் கண்டு மனமிரங்கிய இறைவன் அவர் முன்னே தோன்றி,

"அப்பனே! உனக்கு வேண்டிய வரத்தைக் கொடுப்பதற்காகவே வந்துள்ளேன். உனக்கு வேண்டியதைக் கேள்!"

இந்த முனிவரும் தனக்கு எதுவும் தேவை இல்லையென்று கூறி விட்டார்.

ஆனால் இறைவன் விடவில்லை. வரம் கொடுப்பதுதான் தனது வாடிக்கை என்றும், அந்த முனிவர் கட்டாயம் ஏதாவது ஒரு வரத்தைப் பெற்றுத்தான் ஆக வேண்டும் என்றும், இறைவன் கட்டாயப்படுத்தினார்.

அந்த முனிவரும் வேறு வழியில்லாமல், வரமொன்றைக் கேட்டார்.

"இறைவா! எனது கிழிந்த ஆடையை நான் ஊசியில் நூலைக் கோர்த்து தைக்கும் போதெல்லாம், ஊசியின் பின்னாலேயே நூலும் வருவதற்கு அனுக்கிரகம் செய்ய வேண்டும்."

.... இப்படி அந்த முனிவர் வரம் கேட்டார்.



*"இப்படித்தானே ஊசியின் பின்னால் நூல் வந்து கொண்டிருக்கிறது? இதில் நான் வரங்கொடுத்து செய்வதற்கு எதுவும் இல்லையே?"* ...இப்படி இறைவன் வினவினார்.

*"இதுமட்டுமல்ல; எல்லாமே அப்படித்தான் நடந்த கொண்டிருக்கிறது. இங்கு நீங்கள் செய்வதற்கு என்னதான் இருக்கிறது?"*

... அதையே அந்த முனிவரும் திருப்பிக் கேட்கவும், இறைவன் அங்கிருந்து மறைந்தார்.

இந்தக் கதைகளெல்லாம் எதைக் கூற வருகின்றன?

இறைவன் சக்தியற்றவர் என்பதைக் கூற வருகின்றனவா? இறைவனையும் மீறி, ஏதேதோ நடந்து கொண்டிருக்கின்றன என்று கூற வருகின்றனவா?

எல்லாமே விதிப்படிதான் நடக்கும் என்பதைக் கூற வருகின்றனவா?

விதியையும், பிராரப்தத்தையும் வென்றிட இறைவனால் கூட முடியாது என்பதைக் கூற வருகின்றனவா?

சரி,

கடவுள் என்பது யார்?

'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்பதுதான் உண்மையா?

பல தெய்வங்கள் உள்ளனவா?

தெய்வங்கள், தேவர்கள், அசுரர்கள், பூதங்கள், பிசாசுகள் இப்படியெல்லாம் கூறப்படுகின்றனவே,

... இவைகள் எல்லாம் உள்ளனவா?

இவையெல்லாம் என்ன?

இவைகளில் உள்ள உண்மையை நாம் எவ்வாறு அறிவது?







# 3

## கடவுள் என்பது கற்பிதமா ?

கடவுள் என்பதை,

கடந்து செல் எனும் கட்டளைச் சொல்லாகக் கூறுவோரும் உண்டு.

கடந்து செல்வது என்றால் என்ன?

ஆற்றைக் கடந்து செல்லலாம், நாட்டைக் கடந்து செல்லலாம். ஆனால் இது எந்த விதமான கடந்து செல்லுதலைப் பற்றிக் குறிப்பிடுகிறது?

நாம் எத்தனையோ நபர்களோடு இருக்கிறோம். நாம் எத்தனையோ பணிகளோடு இருக்கிறோம். அனைத்தையும் ஒதுக்கித் தள்ளி விட்டு, கடந்து செல்ல வேண்டுமா?

துறவு கொள்வதைத்தான் இது குறிக்கிறதா?

இன்னும் சிலர், கடவுள் என்பதை, ‘கடந்து உள்ளே சென்று விடு’ என்று கூறுவதாகப் புரிந்து கொள்கிறார்கள்.

அப்படி உள்முகமாகச் சென்று உள்ளேயே தங்கி விட்டால், அதுதான் சமாதி நிலை என்று விவரிக்கப்படுகிறது.

அப்படியானால்,

கடவுள் என்பது, சமாதி நிலையைக் குறிக்கிறதா? சமாதி நிலையில் வீற்றிருப்பதுதான் கடவுள் தன்மையா?

கடந்து செல்வது என்பது, சமாதி நிலையைக் குறிக்கவில்லை. நமக்குள்ளேயே சென்று தங்கி விடுவதையும் குறிக்கவில்லை.

உலகம் முழுவதும் திட வடிவத்தால் ஆக்கப்பட்டது. பௌதிக அம்சத்தால் ஆக்கப்பட்டது. ஸ்தூல அம்சமானது.

உலகம் அனைத்தும் பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்ட ஸ்தூலப் பொருட்களால் ஆனாலும் கூட, நாம், நமது மனோ அம்சத்தால் மட்டுமே, இந்த உலகோடு, தொடர்பு கொண்டுள்ளோம்.

நமது மனது எதைக் காட்டுகிறதோ, நமது மனது எதைப் புரிந்து கொள்ளுகிறதோ, அதை மட்டுமே நாம் அறிகிறோம்.

 

ஆகவே, உலகம் என்பது பௌதிக அம்சமாக இருந்தாலுங்கூட, ஒரு தனி நபரைப் பொருத்த அளவில், அது அவருடைய மன அம்சமாகவும், உணர்வின் அம்சமாகவும் மட்டுமே உள்ளது.

ஆகவே, கடந்து செல்வது என்பது, மனதோடு தொடர்புடையது.

மனதைக் கடந்து செல்வது, அல்லது மனதை ஊடுருவிச் செல்வது ... Tran cendence ... என்பதையே இது குறிக்கிறது. எதிலும் தங்கியிருக்காத நிலையையே இது குறிக்கிறது.

கடவுள் பற்றி இப்படி விளக்கம் கொடுக்கப்படுகிறது.

ஆனால்,

இத்துடன் நம்மால் திருப்தி அடைந்து விட முடியுமா?

அறிவுப்பூர்வமான கருத்துக்கள் மட்டும் நம்மைத் திருப்திப் படுத்தி விடுமா?

தெய்வங்கள் என்ன ஆனார்கள்? தேவர்களும், அசுரர்களும் என்ன ஆனார்கள்?

யாகங்களும், பூஜைகளும், கோயில்களும், ஆலயங்களும், மசூதிகளும், பிரார்த்தனைகளும், வழிபாடுகளும் பொருளற்றவைகளா?

தெய்வங்கள் இருப்பதாகவும், இறைவன் ஏதேதோ காரியங்களைச் செய்வதாகவும் பலர் கூறுகிறார்கள்.

சிலவற்றைத் தாங்கள் தங்களுடைய அனுபவத்தாலேயே அறிந்து கொண்டதாகக் கூறுகிறார்கள்.

ஆனால் இவையெல்லாம் உண்மை என்று கூறிவிட முடியுமா?

மனக்கற்பிதம் என்று ஏன் கூறிவிட முடியாது?

இதனால் சிலர்,

'கடவுளும் கிடையாது, சாத்தானும் கிடையாது, அனைத்தும், பொய்யும் பித்தலாட்டங்களுமே', என்று கூறி விடுகின்றனர்.

இவர்களில் நாம் எவரை ஆதரிப்பது?

' இல்லவே இல்லை', என்று மறுப்பவர்களில் பெரும்பாலோர் ஆன்மீக வாதிகளல்லர்.

ஆகவே, அவர்கள் கருத்தை முழு அளவில் ஏற்றுக் கொள்ள முடியாது. மேலும், இல்லை என்று கூறுபவர்கள், அதை நிரூபிக்கத் தேவையில்லை.

இருக்கிறது என்று கூறுபவர்கள்தாம், அதை நிரூபித்துக் காட்ட வேண்டியதுள்ளது.

ஆனால் அவர்களால் அவர்களுடைய அனுபவங்களை மற்றவர்களுக்கு நிரூபித்துக் காட்ட முடியுமா?

அனுபவங்கள் அனைத்தும் தனிப்பட்டவை. அவை பொது அனுபவம் அல்ல. குற்றாலத்தில் அருவி விழுகிறது. இதில் யார் வேண்டுமானாலும் சென்று

 

குளிக்கலாம். இது பொது உண்மை. அருவியை அடைந்து எவர் வேண்டுமானாலும் குளித்துக் கொள்ளலாம்.

இவை பௌதிகமான உண்மை. பௌதிகமானவற்றை நாம் பரிசீலித்து அறிய முடியும்.

ஆனால் அனுபவங்கள் அனைத்தும்,

மனதோடு தொடர்புடையவை, வெளிப்படையாக அறிய முடியாதவை.

ஒருவர் தான் அனுபவித்தவை அனைத்தும் முழு முதல் உண்மை என்று கூறி விட முடியாது.

அதுபோல், ஒருவர் தான் அனுபவிக்காதவை அனைத்தும் பொய் என்றும் கூறிவிட முடியாது.

இங்கு நம்முடைய நிலைப்பாடு என்ன?

நாம் எந்த அணியில் சேர்ந்து கொள்வது?

அனுபவங்களைக் கூறுவோர் பின்னால் சென்று, அவர்கள் கூறும் வழிமுறைகளைப் பின்பற்றி, அவர்கள் பெற்ற அனுபவத்தை நம்மாலும் பெற முடிகிறதா, என்பதைப் பரிசீலித்து அறிய வேண்டுமா?

அல்லது, 'பேயாவது, பிசாசாவது? தெய்வமாவது, சாத்தானாவது? அனைத்தும் பொய், அனைத்தும் பித்தலாட்டங்கள்' என்று கூறுவோரோடு நாமும் இணைந்து கொள்ள வேண்டுமா?

இரண்டு தரப்பாரையும், இரு துருவங்களிலும் வைத்துக் கொண்டு, நாம் நடுநிலையோடு இருந்து, அதில் பொதிந்து கிடக்கும் உண்மைகளைப் புரிந்து கொள்வதுதான் சிறப்பாக இருக்க முடியும்.

‘இல்லவே இல்லை; அனைத்தும் ஏமாற்று வித்தை’ என்று கூறுபவர்களின் கூற்றை நாம் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வர முடியாது.

ஏனெனில் அவர்கள் நேர் மறையாக எதனையும் கூறவில்லை.

முதல் அணியினரை அவர்கள் விமர்சித்து மறுக்கிறார்களேயொழிய, அது அவர்கள் காட்டும் நேர்மறையான உண்மையல்ல.

உண்மையில் அது ஒரு கருத்து அல்ல. அது ஒரு விமர்சனமே. தங்களுக்கு எட்டாதவையெல்லாம், இல்லையென்று கூறும் ஒரு விமர்சனமே.

அதனால் அவர்களிடமிருந்து நேர்மறையாகத் தெரிந்து கொள்ளக் கூடிய உண்மைகள் எவையும் கிடையாது.

ஆனால் மாற்று அணியினரை ஆய்வு செய்து பார்ப்பதற்கு, இவர்களது அணுகுமுறையையும் கூட ஓரளவு எடுத்துக் கொள்ளலாம்.

ஒரு பொருளை ஆய்வு செய்யும் போது, அந்தப் பொருள், எதை நமக்குக் காட்டுகிறது என்பதில்தாம் அக்கறை கொள்ள வேண்டும்.



நாம் ஒவ்வொருவரும் ஏதோ சில கருத்துக்களையும், அனுபவங்களையும். பின்புலமாக வைத்துக் கொண்டுதான் ஆய்வில் ஈடுபட்டு வருகிறோம். நாம் எந்தக் கருத்துக்களும், அனுபவங்களும் இல்லாத நிலையில், எந்த ஆய்வையும் செய்திட முடியாது.

ஆனால் நாம் சில முடிவுகளோடு இருந்து கொண்டு ஆய்வு செய்திடுவோமானால், நம்மால் நமது முடிவுகளுக்கு அப்பால் போக முடியாது.

கயிற்றில் கட்டப்பட்ட பசுவானது, அந்தக் கயிறு எட்டும் வரைதான் போக முடியும்.

ஆய்வு செய்யும் போது, முன்முடிவு இல்லாமல் ஆய்வு செய்வதுதான் சரியாக இருக்க முடியும்.

நம்முடைய கருத்துக்களை மாற்றிக் கொள்ளும் தயார் நிலையில் ஆய்வு செய்வதுதான் உண்மையைக் கண்டறியும் வழியாகும்.

இல்லாவிடில், நமது முடிவுகளே,

நாம் ஆய்வு செய்யும் பொருளைச் சிறைப்படுத்தி விடும்.

'ஆகவே இல்லை ... கிடையாது .... இருக்க முடியாது' என்ற முடிவுகளுடன் ஆய்வு செய்யாது, என்ன, எப்படி, எவ்வாறு, ஏன் என்ற யதார்த்தமான கேள்விகளுடன் ஒரு பொருளை ஆய்வு செய்வதுதான், உண்மையைக் கண்டு பிடிக்கும் தகுதியை உடையதாகும்.

இறைவன், தெய்வங்கள், தேவர், அசுரர் என்ற விபரங்கள் சம்பந்தமாக, 'இல்லை, கிடையாது, இருக்க முடியாது' என்ற முடிவுகளுடன் ஆய்வு செய்யாத நிலையில், நாம் எப்படித்தான் ஆய்வு செய்வது?

இவை பற்றி, அவை சம்பந்தமான அனுபவங்கள் உடையவர்களின் வார்த்தைகளையும், அவை சம்பந்தமாக, ஆன்மீக நூல்களில் கூறப்பட்ட செய்திகளையும்தான், நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது.

அவை பற்றிய செய்திகள் எப்படி, ஒன்றுக்கு ஒன்று முரண்படாமல் அமைந்துள்ளன, எப்படி, நடைமுறை சாத்தியத்தோடு சம்பந்தம் உடையன, ... என்ற ரீதியில்தான், நாம் ஆய்வுகளை மேற்கொள்ள வேண்டியுள்ளது.

அவற்றை அப்படியே நாம் நம்பி விடாமல், நமக்கு வேண்டியவற்றை மட்டும், நமது தேவைகளுக்கேற்ப எடுத்துக் கொள்வதுதான், நமக்குச் சாத்தியப்பட்ட ஒன்றாகும்.

மற்றபடி,

எல்லாவற்றையும் அனுபவித்து அறிந்திடுவது சாத்தியமல்ல. நமது யுக்திக்குப் பொருத்தமானவைகளை மட்டும் நாம் எடுத்துக் கொள்ளலாம்.

'இல்லை, கிடையாது, இருக்க முடியாது' என்று கூறுபவர்களுக்கும், இந்த ஆய்வுக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது.



அதுபோல்,

தெய்வ நம்பிக்கைகளில் தீவிரமான பிடிவாதம் கொண்டு, ‘ஆய்வுக்கே இடம் கொடுக்க மாட்டேன்’ எனக் கூறுபவர்களுக்கும்,

இந்த ஆய்வு பயன்படாது.

அப்படிப் பார்க்கும் போது,

மிகவும் சொற்பமானவர்களுக்கு மட்டுமே, இந்த ஆய்வு பயனுடையதாக இருக்கும்.

அந்தச் சொற்பமானவர்களுள் நீங்களும் ஒருவராக இருக்கும் பட்சத்தில்,

நீங்களும் இந்த ஆய்வில் பங்கு பெறலாம்.







# பிரம்மமும் பிரபஞ்சமும்

'அனைத்தும் பிரம்மம்; பிரம்மத்தைத் தவிர வேறு எதுவுமே கிடையாது' என்பது சாஸ்திரங்களின் கூற்று.

பிரம்மந்தான் உயிர் அம்சம். அதுதான் சத். அதுதான் உண்மை.

இந்த பிரம்மம் என்பது, ஜட அம்சம் உடையதல்ல. இது உயிர் அம்சம் உடையது.

இந்த பிரம்மத்திலிருந்து பிரபஞ்சம் தோன்றியிருக்கிறது. அந்தப் பிரபஞ்சம் என்பது பிரகிருதி என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.

இந்தப் பிரகிருதி இருவகையாக இருப்பதாகக் கூறப்படுகிறது. ஒன்று ஸ்தூலப் பிரகிருதி; அடுத்தது சூட்சுமப் பிரகிருதி.

 

அதாவது ஸ்தூலப் பிரபஞ்சம் மற்றும் சூட்சுமப் பிரபஞ்சம்.

பிரம்மத்தில் இந்தப் பிரிவுகள் கிடையாது. பிரபஞ்சம் என்று கூறப்படும் பிரகிருதியில்தாம் இப்படி இரண்டு பிரிவுகள் உள்ளன.

ஸ்தூலப் பிரகிருதி அல்லது ஸ்தூலப் பிரபஞ்சம் என்று கூறப்படுபவைதாம், திட ரூபமான இந்த உலகத்துக்குக் காரணம். ஸ்தூலப் பிரகிருதிதான், பௌதிகமான இந்த உலகை உண்டு பண்ணியிருக்கின்றது.

ஸ்தூல வடிவாக இருக்கும், இந்த உலகை உண்டு பண்ணுவதற்காக, இந்த ஸ்தூலப் பிரகிருதி, பஞ்ச பூதங்களாக இருந்து இந்தச் செயலில் ஈடுபடுகிறது.

ஸ்தூலப் பிரகிருதி என்பதும், பஞ்ச பூதங்கள் என்பதும் வேறு வேறல்ல. இரண்டும் ஒன்றே.

ஸ்தூலப் பிரகிருதியானது, பஞ்ச பூதங்களாக இருந்தே, இந்த உலகத்திலுள்ள அத்தனை பௌதிக அமைப்புகளையும் உருவாக்கி உள்ளது.

இந்நிலையில்,

சூட்சுமப் பிரகிருதியின் பங்கு என்ன?

சூட்சுமப் பிரகிருதி என்பதுதான், "சித்" எனும் அறிவின் அம்சமாகும். சூட்சுமப் பிரகிருதிதான், பிரபஞ்ச மனம் அல்லது மகத் என்று கூறப்படுகிறது.

ஸ்தூலப் பிரகிருதி, எப்படி, பஞ்ச பூதங்களாக இருந்து, பௌதிக உலகத்து பொருட்களையும், உயிரினங்களையும் உற்பத்தி செய்கின்றனவோ, அப்படி, சூட்சுமப் பிரகிருதியாக இருக்கும், பிரபஞ்ச மனம் என்னும் மகத், சூட்சுமமான உடல்களை உருவாக்குகின்றது.

பஞ்ச பூதங்களால் வடிவமைக்கப்பட்ட அனைத்தும் ஒன்று போலவா உள்ளன? எத்தனையோ விதமான பூமி, கோள்கள், நட்சத்திரங்கள், எத்தனையோ விதமான தாவரங்கள் மற்றும் உயிரினங்கள் ... இவை அனைத்தும் பஞ்ச பூதங்களால் வடிவமைக்கப்பட்டுள்ளன.

இப்படி சூட்சும சரீரங்களிலும், வித்தியாசங்கள் இருப்பதற்கான வாய்ப்பு உள்ளது. மனிதனை ஜீவ வியக்தி என்றும், ஈஸ்வரனை, ஈஸ்வர வியக்தி என்றும் குறிப்பிடுகின்றனர்.

அப்படிப் பார்க்கும் போது,

ஈஸ்வரன் என்பது கூட, பிரகிருதியின் ஓர் உயர்ந்த அம்சமே.

யோக சாதனைகளில் ஈடுபடும் பலர்,

தங்களுடைய ஸ்தூல உடம்பிலிருந்து வெளிப்பட்டு, தங்களுடைய சூட்சும உடலோடு தற்காலிகமாக வெளியே வந்து விடுகின்றனர்.

கொஞ்ச நேரங்கழித்து மீண்டும் தங்களுடைய ஸ்தூலமான உடலுக்குள் சென்று விடுகின்றனர்.



நமது ஸ்தூல உடல் என்பது, ஸ்தூலப் பிரகிருதியின் அம்சம்.

நமது சூட்சும உடல் என்பது, சூட்சுமப் பிரகிருதியின் அம்சம்.

நம்முடைய மனம் என்பதும், உணர்வுநிலை என்பதும் சூட்சும உடலின் அம்சமாகும்.

மனம் இல்லாத உடல்தான் ஸ்தூல உடலாகும்.

எல்லா ஸ்தூல உடல்களிலும், சூட்சும உடல் பொருந்தி இருந்தாலுங்கூட, மனித உடலில் பொருந்தி இருக்கும் சூட்சும உடலானது, சற்று முன்னேற்றகரமான அம்சங்களுடன் உள்ளது. சிந்தித்துச் செயல்படும் ஆற்றல் உள்ளதாக, அந்த சூட்சும உடல் அமைந்துள்ளது.

இந்த சூட்சும உடலின் மேம்பட்ட நிலையாக, சில தெய்வீக அம்சமுள்ள சூட்சும உடல்களும் இருந்திட வாய்ப்புள்ளது. அதனையே தெய்வங்கள் எனக் குறிப்பிடுகிறோம்.

நாம் நினைத்தால், நமது கைகளை நீட்டவோ, அல்லது மடக்கவோ முடியும். நமது மனம் என்னும் சூட்சும அம்சந்தான் இப்படி நமது பௌதிக உடலை இயக்குகிறது.

இப்படி சில சூட்சுமமான தெய்வீக சக்திகளால், இந்த ஸ்தூலப் பிரபஞ்சத்தையும், தனது விருப்பத்துக்கேற்றவாறு, இயக்குவதற்கு முடியும். அதனையே தெய்வீக சக்தி எனக் குறிப்பிடுகிறோம்.

இந்த தெய்வீக சக்திகள், எதை வேண்டுமானாலும் செய்திடும் ஆற்றல் உள்ளவையாகக் கருதப்படுகின்றன.

அப்படி அவற்றிற்கு ஆற்றல் இருப்பதால், அவை எதை வேண்டுமானாலும் செய்து விட முடியுமா?

ஆற்றல் மிக்க அந்த சக்திகளுக்கும், சில கட்டுப்பாடுகள் உள்ளன. அவற்றிற்கு உட்பட்டே அவைகளால் செயல்பட முடியும்.

கர்மவினை என்பதைப் பற்றிப் பார்க்கும் போதுதான், ஒருவருடைய விதி அமைப்பு எப்படி உள்ளது, அவர் இந்தப் பிறவியில் என்னென்ன அனுபவிக்க வேண்டியுள்ளது, என்பதைப் பற்றியெல்லாம் கூறுகிறார்கள்.

நாம் இறைவனை நாடி, இறைவனைப் புகழ்ந்துபாடி, எனக்கு இப்படி இப்படியெல்லாம் நன்மை புரிய வேண்டும் என்று கேட்டு, அந்த இறைவனும் நமது புகழ்ச்சிக்கும், பூஜைக்கும் மயங்கி, நமக்கு வேண்டிய அனுகூலங்களையெல்லாம் செய்கிறார் என்று கூறுவது, நியாயமாகப் படவில்லை.

நாம் செய்த நல்ல காரியங்களுக்கு நல்ல பலன்களையும், தீய காரியங்களுக்கு தீமையான பலன்களையும்,

நாம் அடைகிறோம் என்றால்,

அதில் ஒரு நியாயம் இருக்கிறது.



அப்படியானால்,

நாம் நம்முடைய தலை விதிப்படி, சில கஷ்டநஷ்டங்களை அனுபவிக்கிறோம் என்றால், அது நாம் ஏற்கெனவே செய்த தீவினைகளின் காரணமாகவே இருக்க முடியும்.

எல்லாமே இறைவன் செயல்தான் என்றால்,

நமக்கு ஏற்படும் கஷ்டநஷ்டங்களுக்கு இறைவனே பொறுப்பு என்றாகி விடும்.

ஒருவருக்கு கஷ்டத்தையும், இன்னொருவருக்கு இன்பத்தையும் இறைவன் கொடுத்திடும் பட்சத்தில், இறைவன் பாரபட்சமுடையவனாகவே ஆகி விடுகின்றான்.

ஆகவே,

நம்முடைய நன்மை, தீமைகளுக்கு, நாம் செய்த நல்வினைகளும், தீவினைகளுமே காரணம் என்று இருந்தால் மட்டுமே,

அது நியாயமாக உள்ளது.





5

# மூவினைகள்

நமது நல்வினை, தீவினை என்பது என்ன? நமது கர்மா என்பது என்ன? கர்ம பலன் என்பது என்ன? பாவ புண்ணியங்கள் என்பது என்ன?

கர்மாவை மூன்று வகையாகப் பிரிக்கிறார்கள்.

சஞ்சித கர்மா,

பிராரப்த கர்மா,

ஆகாமிய கர்மா.

இப்படி மூவகை கர்மாக்கள்.

சஞ்சித கர்மா என்பது, கர்மாக்களின் குவியல். நாம் எத்தனையோ ஜென்மாவில், எத்தனையோ பாவ புண்ணியங்களை ... நல்வினை, தீவினைகளைச் செய்திருக்கலாம்.



அவற்றின் ஒட்டு மொத்தத் தொகுப்புதான் சஞ்சித கர்மா.

நாம் நம்முடைய, மொத்தப் பணத்தையும் வங்கியில் சேர்த்து வைத்துள்ளோம் என்றால், நம்முடைய சேமிப்புக் கணக்கிலுள்ள மொத்த தொகைதான் சஞ்சித கர்மா.

நாம் வங்கியில் பணத்தை சேமித்து வைத்திருக்கிறோமென்றால், மொத்தப் பணத்தையும் ஒரே தடவையாக எடுத்துச் செலவு செய்து விடுவதில்லை. நமது தேவைக்கு மாத்திரம் கொஞ்சம் எடுத்துக் கொள்கிறோம். நாம் செலவுக்கு எடுத்துக் கொள்வது போக, மீதி நமது கணக்கிலேயே இருக்கிறது.

அப்படி நாம் இந்தப் பிறவியில் அனுபவிப்பதற்காக எடுத்துக் கொண்டு வரும் கர்மாதான் பிராரப்த கர்மா.

மொத்தக் கர்மாவையும், நம்மால் ஒரே பிறவியில் அனுபவித்துத் தீர்த்திட முடியாது. ஆகவே, கொஞ்ச கர்மாக்கள் மட்டுமே, இந்தப் பிறவியில் அனுபவிப்பதற்காக ஒதுக்கப்பட்டுள்ளன. அப்படி, இந்தப் பிறவிக்காக மட்டும், நாம் அனுபவிக்க எடுத்துக் கொண்டு வந்த கர்மாதான், பிராரப்த கர்மாவாகும்.

நாம் அனுபவிக்க எடுத்து வந்த கர்மா போக, சஞ்சித கர்மா, மேலும் கொஞ்சம் மீதியாகத்தான் இருக்கிறது. அது நமது கணக்கில், இனிவரும் பிறவிகளுக்காக வைக்கப்பட்டுள்ளது.

சரி,

பிராரப்த கர்மாவை நாம் எடுத்துக் கொண்டு வந்து விட்டோம். அந்த பிராரப்தத்தை நாம் அனுபவித்து முடிக்கிறோம்.

நாம் செலவு செய்வதற்காக வங்கியிலிருந்து எடுத்த பணம்தான் பிராரப்த கர்மா என்று பார்த்தோம்.

அப்படி நாம் செலவு செய்வதற்காக எடுத்துக் கொண்டு வந்த பணத்தை, செலவு செய்வதோடு நின்று விடாமல், ஒரு தொழிலில் முதலீடு செய்து விடுவதாக வைத்துக் கொள்வோம்.

இப்போது, நாம் செய்த முதலீட்டின் காரணமாக,

உபரியாகவும் வருவாய் வந்து விடுகிறது.

இப்படி நாம் பிராரப்த கர்மாவை அனுபவிக்கும் போது, புதிதாகவும், நல்வினை மற்றும் தீவினைகளைச் செய்து விடுகிறோம்.

அதன் விளைவாக,

புதிதாகவும், கர்மவினை, தோன்றி விடுகின்றது.

அப்படிப் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட கர்மாதான், ஆகாமிய கர்மா.

ஆகாமிய கர்மா என்பது, நம்மால் புதியதாகத் தோற்றுவிக்கப்பட்டது.

சஞ்சித கர்மாவும், பிராரப்த கர்மாவும் பழவினை ஆகும். ஆகாமிய கர்மா மட்டுமே புதுவினை ஆகும்.



அப்படி நாம் புதிதாகச் சேர்த்துக் கொண்ட ஆகாமிய கர்மாவை, நாம் நமது சேமிப்புக் கணக்கில் சேர்த்து விடுகிறோம்.

இதனால் நமது சஞ்சித கர்மாவின், எஞ்சியிருக்கும் தொகையானது .... அம்சமானது, அதிகரித்து விடுகிறது.

பிராரப்த கர்மாவுக்காக எடுக்கப்பட்ட கர்மாக்களெல்லாம், ஆகாமிய கர்மாக்களால் ஈடு செய்யப்பட்டு விடுகின்றன.

ஆகவே,

நமது சஞ்சித கர்மா என்பது, எப்போதும் நிறைந்தே காணப்படுகிறது.

இப்படி, மூன்று வித கர்மாக்கள் பற்றியும் கூறப்படுகின்றன.

இவற்றைப் பற்றித் தெரிந்து கொண்டதால் நமக்கு ஆகப் போவது என்ன?

சஞ்சிதம் என்பது அளவிட முடியாத அம்சமாக உள்ளது. பிராரப்த கர்மா என்பது தான் ஓர் எல்லைக்குட்பட்டது. அதை மட்டுமே, நாம், இந்தப் பிறவியில் அனுபவிப்பதற்காக, எடுத்து வந்துள்ளோம்.

அந்த பிராரப்த கர்மாவைப் பற்றிதான், நம்முடைய ஜாதக, ஜோதிடங்கள் அனைத்தும் விவரிக்கின்றன.

இந்தப் பிறவியில், நாம் எப்படிப்பட்ட சூழ்நிலையில், எப்படிப்பட்ட தகுதிகளோடு பிறக்கிறோம், என்னென்ன பணிகளை மேற்கொள்ளுகிறோம், என்னென்ன பிரச்சினைகளைச் சந்திக்கிறோம், நம்முடைய சொந்த பந்தங்கள் யார்யார், நமக்கு என்னென்ன ஆபத்துக்களும். நோய்களும் ஏற்படும், எப்போது நமக்கு மரணம் ஏற்படும்,

... இப்படி நமது இந்தப் பிறவியை நிர்ணயிக்கும் பிராரப்த கர்மா எப்படி அமைந்துள்ளது என்பதையே, நமது ஜாதக ஜோதிடங்கள் விவரிக்கின்றன.

நம்மை முன்பின் அறியாதவர்கள் கூட, தங்களுடைய ஜாதக ஜோதிட ஆற்றலால், நம்மைப் பற்றிய விபரங்களைத் தெளிவாகக் கூறி விடுவார்கள். எவருக்கும் தெரியாத விபரத்தைக் கூடக் கூறி விடுவார்கள்.

இது எப்படி சாத்தியம்?

ஜாதக ஜோதிடங்களுங்கூட ஒருவகைக் கணிதத்தை அடிப்படையாகக் கொண்ட விஞ்ஞானமாகவே வளர்ந்துள்ளது.

சிரமம் அதிகம் எடுத்துக் கொண்டு, நல்ல முறையில் கணித்துப் பார்த்திடுவார்களே ஆனால், நம்மைப் பற்றிய விபரங்கள், மிகவும் துல்லியமாகவே வந்து விடுகின்றன.

ஆனால்,

எவ்வளவு திறமைசாலியான ஜோதிட மேதைகளானாலும் சரி,



எதிர்காலத்தைக் கணித்துக் கூறுவதில் மட்டும் தவறு செய்து விடுகிறார்கள்.

அவர்கள் 'நடக்கும்' என்று கூறியது, நடக்காமல் போய் விடுகின்றது. அவர்கள் 'நடக்காது' என்று கூறியது, நடந்து விடுகின்றது.

ஏன் இப்படி?

இதற்கு, அவர்களாலுங்கூட சரியாக விளக்கம் சொல்ல முடியாது.

ஒன்பது கிரகங்களை வரிசைப்படுத்தி சில கட்டங்களை அமைத்து, அந்தக் கிரகங்கள் இருக்கும் இடத்தைப் பொருத்து கணிதங்களை மேற்கொள்ளுகின்றனர்.

அந்தந்த கிரகங்களின் சக்தியினால் சில காரியங்கள் நடந்து விடும் என்ற நம்பிக்கையையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

ஒரு மோட்டார் வாகனத்தில், வேகத்தைக் காட்டும் மீட்டர் பொருத்தப்பட்டிருக்கும். மோட்டார் வாகனம் எவ்வளவு வேகமாக ஓடுமோ, அந்த வேகத்தைப் பற்றிய விபரம் அந்த மீட்டரில் தெரியும். அந்த மீட்டரில் நகர்ந்து கொண்டிருக்கும் முள்ளானது, வண்டியின் வேகத்தைக் காட்டும்.

நின்று கொண்டிருக்கும் வாகனத்தில் இருக்கும் அந்த மீட்டரிலுள்ள முள்ளை மட்டும், நாம் விரும்பினால், நமது விரலைக் கொண்டே நகர்த்தி விட முடியும்.

50 கிலோ மீட்டரைக் காட்டுவதைப் போல், நாம் முள்ளை நகர்த்துவோமாயின்,

வண்டி அப்படி ஓடுமா?

அப்படி ஓடுவதாயின் வண்டிக்கு பெட்ரோலே ஊற்றத் தேவையில்லை. அந்த முள்ளை மட்டும் நகர்த்தினால் போதும்.

நவக்கிரகங்கள் என்பவையெல்லாம், ஒரு கணிதத்துக்காக ஏற்படுத்தப்பட்ட மீட்டர்களே. அவற்றுக்கென்று தனியே எந்த சக்தியும் கிடையாது.

அதனால், கிரகங்களை சாந்தி செய்து, நல்ல பலன்களைப் பெற்றுக் கொள்வது என்பது, சாத்தியமில்லை. அது மீட்டர் முள்ளை நகர்த்தி, வண்டியை ஓட வைப்பதைப் போன்றதே. அப்படி ஓடவைப்பதற்குச் சாத்தியமே கிடையாது.

அப்படியானால்,

பூஜைகளும், பிரார்த்தனைகளும், வேண்டுதல்களும் தேவையில்லாதவைகளா? லட்சக் கணக்கில் செலவிட்டு யாகங்களையும், பூஜைகளையும் செய்வது தேவை இல்லாதவைகளா?

கிரகத்தைச் சாந்தி செய்து, காரிய வெற்றியை அடைய முடியாதா?

ஒரு வீட்டில், வீட்டு எஜமானி, ஓர் அலுவலகத்தில் அதிகாரியாக வேலை பார்க்கிறார். அவருக்கு



தன்னுடைய சிறிய குழந்தையை வீட்டிலிருந்து கவனிக்க முடியவில்லை.

குழந்தையைக் கவனிப்பதற்காக ஆயா ஒருவர் நியமிக்கப்படுகிறார். குழந்தைக்கு வேண்டியதையெல்லாம் ஆயா கொடுக்கிறார். அவை எதுவும் ஆயாவுடைய சொந்தப் பொருட்கள் அல்ல. தாயார் கொடுக்கச் சொன்னதையே, ஆயா கொடுக்கிறார். ஆயாவுக்கு தானாக முடிவு செய்யும் அதிகாரம் எதுவும் கிடையாது.

இப்படி, நவக் கிரகங்களையும் நிர்வகிக்கும் தெய்வங்களுக்கே, வரமருளும் சக்தி உள்ளது.

நவக்கிரகங்களுக்குச் செய்யும் வழிபாடுகளும், பிரார்த்தனைகளும், அவற்றை நிர்வாகம் செய்யும் தெய்வங்களையே அடைகின்றன.

சரி, அந்தத் தெய்வங்கள்,

நமது பிரார்த்தனையைக் கேட்பார்களா?

அப்படிக் கேட்டு, அவர்கள் பலனைக் கொடுத்தால், அது நியாயமான அணுகுமுறையாக இருக்குமா?





6

# பிரார்த்தனைக்குப் பலன் உண்டா ?

வேடிக்கையாக ஒரு கதையைக் கூறுவார்கள்.

ஒருவன் நியாயத் தீர்ப்புக்காக மரண தேவனான எமதர்மன் முன்னால் கொண்டு செல்லப் படுகின்றான்.

அவனுக்கு சொர்க்கத்தைக் கொடுப்பதா, அல்லது நரகத்தைக் கொடுப்பதா என்று ஆய்வு செய்கிறார்கள்.

கணக்கைப் பார்க்கும் சித்திரகுப்தன் கூறுகிறார். *"இவர் வாழ்க்கையில் எந்த நல்ல கர்ரியங்களையோ, தான தர்மங்களையோ செய்ததில்லை. இவரை நரகத்துக்குத்தான் அனுப்ப வேண்டும்."*

ஆனால் எமதர்மன் உடனடியாக முடிவெடுக்கத் தயாரில்லை.



*"நாம் தவறாக எவரையும் நரகத்துக்கு அனுப்பி விடக் கூடாது. ஆகவே அவருடைய கணக்கை நன்றாகப் பார்* " என்று சித்திர குப்தனிடம் கூறுகிறார்.

சித்திர குப்தனும், நன்றாகத் துளாவிப் பார்க்கிறார், எங்கேயாவது நற்செயல் காணப்படுமா என்று. அப்படித் தேடியதில், அந்த நியாயத் தீர்ப்புக்கு வந்தவர் ஒருமுறை, கண் தெரியாத பிச்சைக்காரனுக்கு, ஐந்து பைசா ஒன்றைக் கொடுத்திருந்தது, பதிவு செய்யப்பட்டிருப்பது தெரிந்தது.

சித்திர குப்தன் அதை எமதர்மனிடம் எடுத்துக் கூறினார்.

தீர்ப்புக்கு வந்தவனுடைய முகம் பிரகாசமாகி விட்டது. ' *பரவாயில்லை, ஒரு ஐந்து பைசா கொடுத்ததன் மூலம் நரகத்திலிருந்து தப்பி விட்டோம்* ' என்று அவன் மகிழ்வடைய ஆரம்பித்தான்.

எமதர்மன் இப்படிக் கட்டளையிட்டார். " *இவருக்கு அந்த ஐந்து பைசாவைத் திரும்பக் கொடுத்து, இவரை நரகத்துக்கே அனுப்பி விடு.*"

நாம் நற்கருமங்கள் புரிந்து, அதனால் தெய்வங்கள் நமக்கு, நற்கதியை வழங்கினால் அது நியாயமாக உள்ளது.

அநீதிகள் பல புரிந்த ஒருவர், பூஜைகளும், யாகங்களும் செய்து நற்பலன் பெற்று விடுவதாயின், அந்தத் தெய்வங்களே, அநீதிக்குத் துணை போவது போன்று இல்லையா?

இந்நிலையில்,

பிரார்த்தனை என்றால் என்ன? தெய்வீக சக்திகளுடைய தகுதிகள் எப்படிப்பட்டவை? அவைகள் நமக்கு எப்படி உதவி புரிகின்றன? அவை நமக்கு அருள் பாலிப்பது எவ்வாறு?

... இவற்றையும் நாம் பார்க்க வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

ஒரு வியாபாரி. அவருக்கு வியாபாரத்தில் ஒரு சிக்கல். ஆதனால் அவர் கடன் பட நேர்ந்து விட்டது. பத்து தினங்களுக்குள் அவர் ஒரு கோடி ரூபாய் தயார் செய்ய வேண்டும். எவ்வளவோ முயன்றும் அவரால் முடியவில்லை.

அவர், தான் விரும்பி வழிபடும் ஆலயத்துக்குச் செல்லுகிறார். மனம் உருகி வழிபடுகிறார்.

மனம் உருகி வழிபட்டதால், அவருக்கு வேண்டிய பணம் கிடைத்து விடும் என்று அவர் நினைக்கவில்லை.

ஆனாலும், அவர் மனம் உருகி பிரார்த்தனை செய்ததன் விளைவாக, அவருடைய மனம், மிகவும் மென்மையாகி விட்டது.

கோயிலுக்குள் நுழையும் போது இருந்த நபர் வேறு; கோயிலிலிருந்து வெளியே வந்த நபர் வேறு.

இக்காலத்தில், நேர்மறை எண்ணங்களை ( Positive Thinking ) வலியுறுத்தி, பல தத்துவங்களும், நூல்களும் ஏற்பட்டுள்ளன.



அதனால் ஏற்படும் அத்தனை விளைவுகளும், தெய்வ நம்பிக்கை மற்றும் தெய்வ வழிபாடுகளின் மூலம் கிடைக்கின்றன.

தன்னை நம்பும் தைரியம் உள்ளவர்கள், வெகு சொற்பமானவர்களே. ஆனால் பிரம்மாண்டமான ஒரு தெய்வ சக்தி நமக்கு உதவி செய்யும் என்பதை ஒரு பாமரனால் கூட நம்பி விட முடியும்.

மனக் கவலை என்பது, நமக்குள்ளே இருந்து நம்மைக் கொன்று விடும் ஆலகால விசமாகும். தன்னம்பிக்கையும், தெய்வ நம்பிக்கையும் மட்டுமே, ஒருவரை இத்தகைய கவலைகளிலிருந்து. தற்காலிகமாகவாவது மீட்டு சாந்தியைக் கொடுக்கிறது.

கவலைகளைத் தாங்க முடியாத சிலருடைய மனது, தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் நோக்கத்தில், தனக்குத்தானே தடம் புரண்டு கொண்டு, தன்னைப் பைத்தியமாக்கிக் கொண்டு விடுகிறது.

இதனால் அவர்களுடைய உயிர் காப்பாற்றப்பட்டு விடுகிறது.

தெய்வ நம்பிக்கையோ அல்லது தன்னம்பிக்கையோ இருக்கும் பட்சத்தில், அவர்களுக்கு, இப்படிப் பைத்தியமாகித் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படாது.

தன்னம்பிக்கை உள்ளவர்கள் அனைவரும், நியாய உணர்வுடனும், தர்ம சிந்தனையுடனும் இருப்பார்கள் என்று கட்டாயமில்லை.

அப்படி இல்லாதவர்கள் கூட, தன்னம்பிக்கை மிக்கவர்களாக இருக்கக் கூடும்.

ஆனால் தெய்வ சக்திகளிடம் நாம் உதவி கோரும் போது, நம்முடைய நடத்தை முக்கியத்துவம் பெறுகிறது. தர்ம நியாயங்களை அனுசரிக்கும் ஒருவனால்தான், இறைவனிடம் உதவி கேட்க முடியும் என்ற நிலை உள்ளது.

செய்த தவறிலிருந்து தப்பிக்கக் கூட இறைவனுடைய உதவியை நாடுபவர்களையும் பார்த்திருக்கிறோம். ஆனால் அது பொதுநிலை அல்ல. அவையெல்லாம் விதி விலக்குகளே.

ஒழுக்கக் கேடானவர்கள் இறைவனை அணுகுவதற்கு, பயங்கொண்டு விடுவார்கள். அப்படியே அணுக நேர்ந்தாலும், இனி ஒழுக்கமாக நடந்து கொள்ளுவதாக, உறுதியெடுத்துக் கொள்வார்கள்.

இறை நம்பிக்கை உடையவர்களில் சிலர், தங்கள் மதத்தையும், தங்கள் வழிபாட்டு முறைகளையும் காப்பதற்கு முயன்று, உலகத்தையே யுத்த களமாக்கவும் செய்து விடுகிறார்கள்.

அவர்கள் மதத்தையும், இறைவனையும், தனி மனித முன்னேற்றத்துக்கான வழிமுறையாகக் கருதாமல், சமுதாய அம்சமுள்ளதாக்கி விடுகின்றார்கள். இதனால், சமுதாய முன்னேற்றத்தை விட, சண்டை சச்சரவுகளே அதிகம் ஏற்பட்டு விடுகின்றன.



இவையெல்லாம், நமது ஆய்வுக்குத் தொடர்பில்லாத செய்திகள். அவற்றிலிருந்து நமக்குத் தேவையானது எதனையும் எடுத்துக் கொள்ளச் சாத்தியமில்லை. ஆகவே அதனை நாம் கை விட்டுவிட்டு, மேலே தொடர்வதுதான் சிறந்தது.







# தெய்வங்களால் சாத்தியமாகுமா ?

நமது பிரார்த்தனைகளைப் பற்றியும், இறைவன் அதற்கு அருள் புரிவதைப் பற்றியும் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

நமது பிரார்த்தனைகளுக்கு இறைவன் செவி சாய்ப்பது உண்டா? அப்படி நிகழ்ந்திருக்கிறதா?

பிரார்த்தனையின் காரணமாக எத்தனையோ அற்புதங்கள் நிகழ்ந்ததாகவும், தங்களுடைய பிரச்சினைகளெல்லாம் தீர்ந்து விட்டதாகவும் பலர் கூறுகின்றனர். அவர்கள் கூற்று பொய்யானவை அல்ல. அவர்கள், அவர்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களையே கூறுகின்றனர்.

அவை அற்புதங்களாகப் பேசப்படுகின்றன. ஏனெனில், அவை யாவும், தினசரி நிகழ்ந்திடும் சர்வ சாதாரணமான நிகழ்வுகள் அல்ல.



அது சம்பந்தமாக நாம் கணக்கு எடுத்துக் கொண்டோமானால், அப்படி நமது பிரார்த்தனை நிறைவேறியது என்று அமைவது வெறும் ஒரு சதவீதம் மட்டுமே உள்ளது. 99 % நிறைவேறாமல் போய் விடுகின்றது. ஒவ்வொருவரும், பலவிதமான கோரிக்கைகளை வைத்திருக்கும் போது, அவற்றில் ஏதாவது ஒன்று நிறைவேறி விடலாம். அது தற்செயலாக ஏற்பட்டதா, இறைவன் கருணையால் ஏற்பட்டதா என்று கூட அறுதியிட்டு கூறி விட முடியாது.

எங்கேயோ ஒன்றுதான் மிக அபூர்வமாக, 'தற்செயலாக இது நடந்திருக்க முடியாது, இறை சக்தியின் உதவியில்லாமல் இது நடந்திருக்க முடியாது' என்று சொல்லக் கூடிய அளவில் நடந்துள்ளது.

சரி,

அந்த அபூர்வமான ஒரு நிகழ்வையே எடுத்துக் கொள்வோம்.

நமக்கு ஏற்பட்ட பிரச்சினைகளிலிருந்து இறைவனுடைய அருளினால் மட்டுமே மீண்டு விடுவதாக வைத்துக் கொள்வோம்.

நமது முயற்சிகள் உதவி செய்யவில்லை; நமது ஜாதக ஜோதிடங்கள் கூட நம்மைக் கைவிட்டு விடுகின்றன. நமக்குத் தீர்வே கிடையாது என்று ஜாதக ஜோதிடங்களும் கூட கூறி விட்ட நிலையில்,

நமது பிரார்த்தனையின் மூலம், இறையருளால் நமக்கு வேண்டிய தீர்வு கிடைத்து விடுவதாக வைத்துக் கொள்வோம்.

இது எப்படி சாத்தியம்?

நமக்கு விதிக்கப்பட்டவைகளையும் மீறி, இது எப்படி நடந்து விடுகிறது?

நம்முடைய பிரார்த்தனையைக் கேட்டு, இறைவன் மயங்கி விட்டாரா? அவர் தனது விருப்பத்துக்கு ஏற்ற வகையில், விதிமுறைகளையும் மீறி, பிராரப்த கர்மாவையும் மீறி,

நமக்கு உதவி செய்து விடுகிறாரா?

தன்னைப் பிரார்த்தித்து, தன்னை மகிழ்வித்தவனை தானும் மகிழ்விக்க வேண்டும் என்று கருதி, விதிமுறைகளையும் மீறி, நமக்கு உதவி செய்து விடுகிறாரா?

அப்படி அவர் செய்வாரேயானால்,

அவருமல்லவா குற்றவாளி ஆகி விடுவார்?

அவருடைய சொந்த விருப்பு வெறுப்புக்களைக் காட்டுவாரேயானால், அவரும் ஒரு சராசரி மனிதராக அல்லவா போய் விடுவார்?

அப்படி விதியை மீறி செயல்படுவதற்கு,

அவர் என்னதான் நியாயத்தைக் கூறப்போகிறார்?

இந்த நிலையில்தான்,

பிராரப்தத்தைக் கடந்த செயல் என்றால் என்ன, என்பதைப் பார்க்க வேண்டிய நிலையில் உள்ளோம்.



பிராரப்த கர்மா என்பது, நாம் இந்தப் பிறவியில் அனுபவித்து முடிப்பதற்காக எடுத்துக் கொண்டு வந்த கர்மா. அதன்படி தான் நம்முடைய இந்தப் பிறவி அமைந்துள்ளது.

அந்தப் பிராரப்த கர்மா என்பது, நம்முடைய மொத்த கர்மாவான சஞ்சித கர்மாவிலிருந்து, எடுத்துக் கொண்டு வரப்பட்ட ஒரு சிறிய பகுதி மட்டுமே.

நம்முடைய சஞ்சித கர்மாதான், நம்முடைய மொத்த கர்மா.

அந்த மொத்த கர்மாவும் இறைவனால் ஏற்படுத்தப்பட்டவை அல்ல. அவை யாவும், நம்முடைய செயல்களால் ஏற்படுத்தப்பட்ட தொகுப்பே ஆகும். நாம் செய்த நல்வினை மற்றும், தீவினைகளால், நாமாகவே ஏற்படுத்தி வைத்த தொகுப்பே ஆகும்.

நம்முடைய சஞ்சித கர்மாவுக்கு இறைவனோ, வேறு எவருமோ பொறுப்பல்ல. நாம் மட்டுமே பொறுப்பு.

அவை அனைத்தும் நம்முடைய சொந்தச் சேமிப்பு மட்டுமே.

நாம் பிராரப்தத்தை மட்டுமே எடுத்துக் கொண்டு, பிறவி எடுத்துள்ளோம். பிராரப்தத்தை மட்டுமே அனுபவித்து வருகிறோம். அந்தப் பிராரப்தப் படியே, அனைத்தும் நடந்து வரும்போது, அதனையும் மீறி,

நம்மை நம்முடைய பிரச்சினைகளிலிருந்து காப்பாற்றும் படி இறைவனிடம் வேண்டுகிறோம்.

நம்முடைய பிராரப்தம் கூட நம்மைக் காப்பாற்ற முடியாமல் நம்மைக் கைவிட்டு விட்டது.

இந்நிலையில் இறைவனுடைய கருணையினால் அற்புதம் நிகழுகின்றது. பிராரப்தத்தையும் மீறி, நாம் காப்பாற்றப்பட்டு விடுகிறோம்.

இது எப்படி நிகழுகின்றது?

இறைவன் இங்கு எப்படி இதனைச் செய்ய முடிகிறது?

நம்முடைய பிராத்தனையில் நியாயம் இருக்கும் நிலையில்,

இறைவன்,

நம்முடைய சஞ்சித கர்மாவில் எஞ்சியிருக்கும் சில நன்மையான அம்சங்களை எடுத்து நமக்குக் கொடுத்து விடுகிறார்.

நம்மைக் காப்பாற்றத் தகுந்த அம்சம் நம்முடைய சஞ்சித கர்மாவிலுங் கூட இடம் பெறாத நிலையில், இறைவனால் கூட நமக்கு உதவ முடியாது.

அவரும் நம்மோடு சேர்ந்து நமக்காக வருத்தப்பட்டுக் கொள்ளலாம். அவ்வளவுதான் அவரால் முடியும்.

இதனால்தான், பல சந்தர்ப்பங்களில் பிராரப்தத்தையும் மீறிய பலனை, இறைவனால் கொடுக்க முடிந்து விடுகின்றது.



ஜாதக ஜோதிடங்களின் கூற்றும், முடிவுகளும் நமது பிரார்த்தனையினால் பொய்யாக்கப்பட்டு விடுகின்றன.

அப்படியானால்,

எல்லோரும் இறைவனை வணங்கி விதியை மாற்றியமைத்துக் கொள்ளுங்கள் என்பதை, நாம் கூற வருகிறோமா?

விதியை மதியால் வெல்லுவது என்பது இதுதானா?

அப்படியானால் விதியை வெல்ல விரும்புபவர்கள் அனைவரும் இறைவனை வழிபட்டால்தான் முடியுமா?

நம்முடைய முடிவை நாத்திகர்கள் ஏற்றுக் கொள்வார்களா?

எத்தனையோ மதங்களும், எத்தனையோ விதமான பிரார்த்தனை முறைகளும், சம்பிரதாயங்களும் உள்ளன.

நம்முடைய கருத்துக்களுக்கும், அவர்களுடைய கருத்துக்கள் மற்றும் சம்பிரதாயங்களுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது.

நாம் கூறும் கர்மாக்களையே அவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். பிறவிக் கொள்கைகளைக் கூட எல்லா மதங்களும் ஏற்றுக் கொள்வதில்லை.

அப்படியானால் அனைவருக்கும் பொதுவான பொது உண்மை என்பது என்ன?







8

# ஆகாமிய கர்மா

இதுவரையிலும், பிராரப்த கர்மா என்றால் என்ன, சஞ்சித கர்மா என்றால் என்ன என்பதைப் பார்த்தோம்.

அடுத்து நாம் பார்க்க வேண்டுவதுதான் ஆகாமிய கர்மா.

சஞ்சிதம் என்பது நம்முடைய மொத்தச் சேமிப்பு. அதிலிருந்து நாம் செலவு செய்வதற்காக எடுத்து வந்தது பிராரப்தம்.

அப்படிச் செலவு செய்வதற்காக எடுத்துக் கொண்டு வந்த பணத்தை, செலவு செய்வதோடு மட்டும் நில்லாமல், அதில் ஒரு பகுதியை முதலீடாகவும் செய்து விடுகிறோம். அந்த முதலீட்டிலிருந்து புதிய வருவாய் ஏற்பட்டு விடுகிறது.

இப்படி நாம் கர்மாவை அனுபவித்துக் கழித்து விடுவதோடு மட்டும் நில்லாமல், புதியதாக, புதுக் கர்மாவைச் சம்பாதித்து விடுகிறோம்.

இதுதான் ஆகாமிய கர்மா. இந்த ஆகாமிய கர்மா அனைத்தும், நாமாக ஏற்படுத்திக் கொண்டவை. இவை நமது மொத்தச் சேமிப்பில் சேர்ந்து விடுகின்றன. இவை நமது சஞ்சித கர்மாவாக மாற்றம் பெற்று விடுகின்றன.

எல்லா கர்மாக்களுடைய மூலஸ்தானமே இந்த ஆகாமியந்தான். ஆகாமிய கர்மாதான், சஞ்சித கர்மாவாகச் சேமிக்கப்படுகிறது. அதுதான் பிறகு, பிராரப்த கர்மாவாக, அனுபவத்துக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

நம்முடைய பிராரப்த கர்மாவின்படி, நமக்கு ஏற்படும் சோதனைகளிலிருந்து நம்மைக் காப்பாற்ற,

இறைவனும் கூட,

சஞ்சித கர்மாவிலிருந்துதான் எதையாவது எடுத்துக் கொண்டுவர வேண்டியுள்ளது.

சஞ்சித கர்மாவிலிருந்து இறைவன், நமக்கு வேண்டியதை எடுப்பதற்குப் பதிலாக, ஆகாமிய கர்மாவிலிருந்தும் எதையாவது எடுக்க முடியுமா?

முடியாது.

முடியவே முடியாது.

ஏன்?

 

மாணவர்கள் தேர்வு எழுதுவதைப் பற்றி நாம் அனைவரும் தெரிந்து வைத்திருக்கின்றோம்.

சில வேளைகளில், மாணவர்களுக்குக் கொடுக்கப்பட்ட பாடத் திட்டங்களையும் மீறி, தவறுதலாக, கேள்விகள் கேட்டு விடுவதுண்டு.

அந்நிலையில் அந்தக் கேள்விக்குப் பதிலளிக்க முனைந்தவர்கள் அனைவருக்கும் முழு மதிப்பெண் கொடுத்து விடுவதுண்டு.

ஆனால் அந்தக் கேள்வியைக் கண்டு கொள்ளாதவர்களுக்கு அப்படி மதிப்பெண் கொடுப்பது கிடையாது.

ஏதாவது எழுதியிருந்தால்தானே மதிப்பெண் கொடுக்க முடியும்?

ஆகாமியம் ... ஆகாமிய கர்மா என்பது இதுவரை இல்லாத ஒன்று. இனிமேல்தான் ஏற்படக் கூடிய ஒன்று. அதனால் நமது ஆகாமிய கர்மாவிலிருந்து எந்த நன்மையையும் இறைவனால் கூட எடுத்துக் கொடுக்க முடியாது.

இறைவனால் எடுத்துக் கொடுக்க முடிந்ததெல்லாம், சஞ்சித கர்மாவிலிருந்து, எதையாவது எடுத்துக் கொடுத்து உதவுவதுதான்.

ஆகாமிய கர்மா எப்படி நிகழுகின்றது?

ஒரு பண்டிதருடைய தோட்டத்துக்குள் பசுமாடு ஒன்று புகுந்து விட்டது. அந்தப் பண்டிதர் ஒரு கம்பை எடுத்து மாட்டை அடித்துக் கொன்று விட்டார்.

எல்லோரும் அவரிடம், "*பசுவைக் கொன்றது பாவமல்லவா?* " என்று கேட்டனர்.

அவர் அதற்கு, "*கைகள் இரண்டும் தேவர்கள் தலைவன் இந்திரனுக்குச் சொந்தமானவை. ஆகவே கைகளால் செய்யும் பாவங்கள் அனைத்தும் இந்திரனையே சேரும்*" என்று அந்தப் பண்டிதர் கூறிவிட்டார்.

ஒருநாள் அந்தப் பண்டிதர் தோட்டத்திற்கு நீர் விட்டு அதனைப் பராமரித்துக் கொண்டிருக்கும் போது, இந்திரன் ஓர் அழகிய பெண்ணுடைய வடிவத்தில் அங்கே வந்து, தோட்டத்தையும், தோட்டத்திலுள்ள மலர்களையும் பார்த்து வியந்தார்.

" *இவ்வளவு அற்புதமான தோட்டத்தையும், இந்த மலர்களையும் உருவாக்கியது யார் ?* " என்று கேட்டார்.

அந்தப் பண்டிதரும், "*நானே பாடுபட்டு, எனது சொந்தக் கைகளால், ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்து உருவாக்கியதுதான் இந்தத் தோட்டம்*" என்று கூறினார்.

உடனே இந்திரன் தனது சுய உருவுக்கு வந்து, "*தோட்டத்தை உருவாக்கும் போது, உமக்குச் சொந்தமாயிருந்த கைகள், பசுமாட்டைக் கொல்லும் போது மட்டும் எப்படி எனக்குச் சொந்தமாகி விட்டன? அதைத் தெரிந்து போகத்தான் வந்தேன்*", என்று கேட்டார்.



ஆகாமிய கர்மா அனைத்தும், முழுக்க முழுக்க நமக்கு மட்டுமே சொந்தமானவை. அவற்றை, நாம் மட்டுமே ஏற்படுத்தியுள்ளோம்.

எனது விதிதான் காரணமென்றோ, எனது முன்வினைதான் காரணமென்றோ கூறி விட முடியாது.

பிராரப்த கர்மாக்கள் அனைத்தும், சில சூழ்நிலைகளை நமக்கு அமைத்துக் கொடுக்கின்றன என்பதை, உண்மை என எடுத்துக் கொண்டாலும், ஆகாமிய கர்மா என்பது, முழுக்க முழுக்க நம்முடைய சொந்த விருப்பத்தின் மூலமே ஏற்படுகின்றது.

பிராரப்த கர்மாவின் மூலம் ஏதாவது ஏற்படுவதாக இருந்தால், அதற்கு நாம் பொறுப்புக் கிடையாது. ஆனால் பிராரப்த கர்மா என்பது வெறும் சூழ்நிலை மட்டுமே. செயல் முழுவதும் நம்முடைய கைகளிலேயே உள்ளது.

நாம் செய்யாத தவறுக்கு, ஒருவர் நம்மைக் குற்றஞ் சாட்டுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது அவர் மீது கோபம் ஏற்பட்டு விடுகிறது. அந்தக் கோபம் நம்மையறியாமல் ஏற்பட்டு விடுகிறது.

கோபம் ஏற்பட்டதால் நாம் அவரைத் திட்டி விடுகிறோம் ... அவர் நமக்குக் கீழே வேலை பார்ப்பவராக இருக்கும் பட்சத்தில்.

ஆனால் அவரே நமது மேலதிகாரியாக இருக்கும் பட்சத்தில், நாம் அவரைத் திட்டி விட மாட்டோம். வேண்டுமானால் மனதிற்குள்ளேயே அவரைத் திட்டிக் கொள்வோம்.

நமக்கு ஏற்படும் உணர்வுகள், நம்மையறியாமல் ஏற்பட்டாலும்,

அவற்றைச் செயலாக மாற்றுவது,

நமது கைகளிலேயே உள்ளது.

நமக்கு ஏற்படும் உணர்வுகளுக்கும், உணர்ச்சிகளுக்கும், நம்முடைய இயல்போ, அல்லது நமது பிராரப்தமோ, காரணமாக இருந்தாலும்,

நமது செயல்கள் அனைத்தும்,

நாமாக விரும்பி செய்யக் கூடியவையே.

அதனால்தான், ஒருவர் மீது வெளிப்படையாகக் கோபங் கொள்வதும், பிறிதொருவர் மீது வெளிப்படையாகக் கோபங் கொள்ளாதிருப்பதும், சாத்தியமாகிறது.

பாவ, புண்ணியங்களையும், நல்வினை, தீவினைகளையும் கணிப்பது நமது செயல்களைக் கொண்டே. நாமாக மனம் விரும்பி என்ன செயல்களைச் செய்கிறோமோ, அவையே நமது கர்மாவாக உள்ளன. அவையே ஆகாமிய கர்மாவாக உள்ளன.

நம்முடைய செயல்களை, நாமாகச் சிந்தித்து முடிவெடுத்துச் செய்யக் கூடிய சுதந்திரம் நமக்கு உள்ளது.

நாமாகச் சிந்தித்து, நாமாக முடிவெடுத்து, நாமாகச் செயல்படுவதுதான் நமது செயல். அதுதான் ஆகாமியமாக அமைகிறது.



அந்நிலையில்தான், நாம் நமது செயல்கள் அனைத்தையும் செய்து வருகிறோம்.

நமது செயல்களுக்கு, நாம் மட்டுமே பொறுப்பாவோம். நமது பிராரப்தமோ, இறைவனோ பொறுப்பு கிடையாது.

நமது ஆகாமிய கர்மங்கள் அனைத்தும், நாம் செய்யும் போது மட்டுந்தான் புதிதாகத் தோன்றி வருகின்றன. அப்படி உற்பத்தி செய்யப்பட்ட கர்மாவுக்கு நாம் மட்டுமே பொறுப்பு.

அந்த ஆகாமிய கர்மா, இதுவரை எந்தக் கணக்கிலும் வரவு வைக்கப்பட்ட ஒன்று அல்ல. இப்போதுதான் முதன் முறையாக உருவாகி உள்ளது. இனிமேல்தான் அது நமது கணக்கில் சேர்க்கப்படும்.

அப்படி உருவாகும் ஆகாமிய கர்மா, நேரடியாகச் சென்று சஞ்சித கர்மாவுடன் சேர்ந்து கொள்வதில்லை. அவை நேரடியாக சஞ்சித கர்மாவுடன் சேர்ந்து கொள்வதாகக் கூறப்பட்டாலும், அப்படி அது சேர்ந்து கொள்வதில்லை.

அது முதலில் நாம் அனுபவித்து வரும் பிராரப்த கர்மாவைத்தான் சென்று அடைகின்றது. அதனால்தான், பல சந்தர்ப்பங்களிலும், நாம் இந்தப் பிறவியில் செய்த நல்லவை கெட்டவைகளுக்கான பலனை இந்தப் பிறவியிலேயே அனுபவிக்க வேண்டியதாகி விடுகின்றது.







## விதியை வெல்ல முடியுமா ?

இந்த ஆகாமியம் என்பது நாம் ஏற்கெனவே சேர்த்து வைத்ததும் இல்லை; அதிலிருந்து நாம் எடுத்துக் கொண்டு வந்ததும் இல்லை. இது தெய்வமோ அல்லது சமுதாயமோ நமக்குக் கொடுத்ததும் இல்லை.

*'இப்படித்தான் நான் நடந்து கொள்வேன்'* என்று நாமாக முடிவெடுத்து நாமாக நமது சுய விருப்பத்தைக் கொண்டு ஏற்படுத்துவதே இந்த ஆகாமியம்.

அந்த ஆகாமியம், நமது சஞ்சிதத்தின் கட்டுப்பாட்டிலோ, நமது பிராரப்தத்தின் கட்டுப்பாட்டிலோ, அல்லது தெய்வங்களின் கட்டுப்பாட்டிலோ உள்ளது கிடையாது.

அது முழுக்க முழுக்க நமது கட்டுப்பாட்டில் மட்டுமே உள்ளது.



நமது முடிவுக்கு மட்டுமே கட்டுப்பட்டது.

நாம் எப்படி முடிவு செய்கிறோமோ, அப்படித்தான் நமது செயல் அமைந்து விடுகின்றது.

நமது சூழ்நிலையின் அமைவுக்கு, நமது பிராரப்தம் காரணமாக அமையலாம்.

ஆனால் அதனுடைய கட்டுப்பாட்டில் அமைந்ததல்ல ஆகாமியம்.

அது நமது முடிவுக்கு மட்டுமே கட்டுப்பட்டது.

அது வேறு எதற்குமே கட்டுப்பட்டது கிடையாது.

நம்முடைய ஆகாமியந்தான், எல்லாக் கர்மாக்களுக்கும் பிறப்பிடமாக அமைந்து, எல்லா விதமான மற்ற கர்மாக்களையும் உருவாக்குகின்றது.

ஆனால் ஆகாமியம் என்பது, நமது முடிவுக்கு மட்டுமே கட்டுப்பட்டது.

நாம் விவேகத்துடன் முடிவெடுக்கும் பட்சத்தில், ஆகாமியம் என்பதும் விவேகத்துடன் கூடியதாக மாறி விடுகின்றது.

நம்முடைய பிராரப்தத்தில் ஏற்பட்ட பிரச்சினைகளைத் தீர்க்க, நாம் இறைவனைப் பிரார்த்திக்க வேண்டியதாகி விட்டது என்பதைப் பார்த்தோம்.

அந்த இறைவனும்,

நமது சஞ்சித கர்மாவில் நமக்குப் பொருத்த மானதை எடுத்துக் கொடுத்து, நமது பிராரப்தப் பிரச்சினைகளைச் சீரமைத்துக் கொடுப்பதாகப் பார்த்தோம்.

சஞ்சித கர்மா, நமது கைவசம் இல்லாவிட்டாலும், எல்லா கர்மாக்களுக்கும் மூலமான ஆகாமிய கர்மா, முழுமையாக நம் கைவசமே உள்ளது.

இதனால் நமது பிராரப்தத்தில் ஏற்பட்ட பிரச்சினைகளைத் தீர்க்கும் வாய்ப்பு, நம் கைவசமே உள்ளது.

நமது ஆகாமியம் அனைத்தும் நற்செயல்களாக அமைந்திடும் பட்சத்தில்,

அவையே,

நமது தீவினைகள் அனைத்துக்கும் மாற்று மருந்தாக அமைந்து விடுகின்றது.

ஜாதக ஜோதிடங்கள் அனைத்தும் பிராரப்தத்தை மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்ள முடியும். விசேட பயிற்சி பெற்றவர்களால், சஞ்சிதத்தைக் கூட ஓரளவு கூறி விட முடியும்.

ஆனால் ஆகாமியத்தைக் கூற எவராலுமே முடியாது.

ஏனெனில் அது எந்தக் கணக்கிலும் இதுவரை வந்ததில்லை.

ஆகாமியத்தைப் பற்றிக் கூற, தெய்வங்களால் கூட முடியாது.



நமது ஆகாமிய கர்மாக்கள் அனைத்தும், நமது பிராரப்த கர்மாவில் குறுக்கிடும் காரணத்தினால், ஜோதிடர்கள், நமது எதிர் காலத்தைப் பற்றிக் கூறும் கணிப்புக்கள் பெரும்பாலும் பொய்யாகி விடுகின்றன; தவறிப்போய் விடுகின்றன.

நமது ஆகாமியம், நேரடியாக பிராரப்தத்தில்தான் பங்கேற்றுக் கொள்கிறது. அதுபோகவும் எஞ்சியிருக்கும் ஆகாமிய கர்மாக்களே,

சஞ்சித கர்மாவாக,

சேமிப்புக்குச் சென்று விடுகின்றன.

நற்செயல்களைச் செய்ய வேண்டும் என்ற முடிவுடன் செய்யப்படும் ஆகாமிய கர்மாக்கள், நற்பலன்களைத் தரும் வகையில், நமது பிராரப்த கர்மாவுடன் இணைந்து விடுகின்றன.

நற்செயல்களைப் புரிந்து, நமது பிராரப்த கர்மாவை வகைப்படுத்துவதை விட்டு விட்டு,

பூஜைகள், பரிகாரங்கள் என்று அலைவதானது, கையில் வெண்ணையை வைத்துக் கொண்டு, நெய்க்கு அலைவது போன்றதுதான்.

நற்செயல்களைப் புரிவது என்பது, யாகங்களை விடவும், பூஜைகளை விடவும் உயர்ந்தது.

நற்செயல்களைப் புரியும் ஒருவனுக்கு, தெய்வங்கள் கூட தங்கள் உடைகளை இறுக்கிக் கட்டிக்

கொண்டு உதவிக்கு ஓடிவரும் என்று, வள்ளுவரே இதுபற்றிக் குறிப்பிடுகிறார். (1023)

பேச்சு வழக்கில் 'நல்லதுக்குக் காலமில்லை' என்று பலரும் கூறக் கேள்விப்பட்டிருக்கலாம்.

நம்முடைய முன்னோர்கள் அமைத்த பழமொழிகளில் பல, புதிர்களைப் போன்று அமைந்து விட்டதால், ஒவ்வொருவரும் அவர்களது மனதுக்கு ஏற்றவாறு விளக்கத்தைக் கொடுத்து விடுகிறார்கள்.

ஒருவர் பிறருக்கு உதவி செய்தும், அந்த உதவியைப் பெற்றவர், விசுவாசமாக நடந்து கொள்ளாத நிலையில், அப்படி உதவி செய்தவர் மனம் நொந்து, '*இது கலிகாலம். இங்கு நல்லதுக்குக் காலமில்லை*' என்று கூறி விடுவார்.

உண்மையில், இந்தப் பழமொழி, நமது நற்செயலுக்கு, உற்சாகம் ஊட்டும் ஒன்றாகவே அமைந்துள்ளது.

நாம் ஏதாவது ஒரு செயலைச் செய்ய ஆரம்பிக்கும் போது, நேரம் காலம் பார்த்து ஆரம்பிப்பது வழக்கம்.

ஆனால் '*நற்செயல்களைப் புரிவதற்கு கால நேரங்களைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டாம்*' என்பதை அறிவுறுத்தவே இந்தப் பழமொழி இப்படிக் கூறப்பட்டுள்ளது.

 

நேரம் காலம் பார்க்காமல் நற்செயல்களைச் செய்திடுவாயாக என்பதுதான் இதன் உண்மையான பொருள்.





10

# நற்பண்புகள் அவசியம்

நமது நற்பண்புகளை வளர்ப்பது சம்பந்தமான இன்னுமொரு பழமொழியையும், அதனை ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் பந்தாடி வருவதையும் பார்க்க நேர்ந்தது.

அந்தப் பழமொழி இதுதான் :

"*பந்திக்கு முந்து; படைக்குப் பிந்து*".

ஒவ்வொருவரும் தங்களுடைய புலமையை எல்லாம் இந்தப் பழமொழி மீது ஏற்றி வைத்து, இந்தப் பழமொழியையே சிதைத்து விட்டனர்.

முதற்பந்தியில் சாப்பிட்டால் நல்ல பட்சணங்கள் கிடைக்கும். கடைசிப் பந்திக்குப் போனால் சில அயிட்டங்கள் இல்லாமல் போய் விடும். படையில் செல்லும் போது, எதிரியைப் பற்றித் தெரியாமல் கண்



முடித்தனமாகப் பாய்ந்து சென்று விடக் கூடாது. தாமதித்துத்தான் செல்ல வேண்டும்.

... இப்படி எத்தனையோ விதமான விளக்கங்களைக் கொடுத்துள்ளனர்.

ஆனால் அதனுடைய உண்மையான பொருள் வேறு.

சாப்பாடு என்பது வேறு, பந்தி என்பது வேறு. தனியாக இருந்து கூடச் சாப்பிட்டு விடலாம். தனியாக இருந்து பந்தி போட முடியாது. பந்தி என்பது பலரும் சேர்ந்து சாப்பிடுவது.

படை என்பது படைவீரர்களைக் குறிப்பிடுவதல்ல; அது போரைக் குறிப்பிடுகிறது.

பந்தி என்பது, சமாதானத்தோடும், நல்லுறவோடும் சேர்ந்திருப்பதைக் குறிக்கிறது.

சமாதானத்துக்கு முதலிடம் கொடுக்க வேண்டும், முடிந்த வரை சண்டையைத் தாமதப்படுத்த வேண்டும் என்பதையே, '*பந்திக்கு முந்து, படைக்குப் பிந்து*' என்ற பழமொழி கூறுகின்றது.

நற்செயல்களுக்கும், நற்பண்புகளுக்கும், எல்லா மதங்களுமே, எவ்விதப் பேதமும் காட்டாமல் முக்கியத்துவம் கொடுத்து வருகின்றன.

ஒவ்வொருவருமே அடுத்தவரிடமிருந்து அதைத்தான் எதிர் பார்க்கின்றனர்.

நாம் அன்பில்லாதவராகக் கூட இருக்கலாம். ஆனால் நாம், பிறரிடம் அன்பைத்தான் எதிர் பார்க்கிறோம்.

நாம் கோபப்படுபவராக இருக்கலாம். ஆனால் பிறர் நம் மீது காட்டும் கோபத்தை நம்மால் தாங்கிக் கொள்ள முடியாது.

இப்படி எல்லோரும் நல்லவற்றையே பிறரிடமிருந்து எதிர்பார்க்கிறார்கள்.

இயேசு நாதர் இதைத்தான் எளிமையாகக் கூறுகிறார்.

*"பிறர் உன்னிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறாயோ, அப்படி நீ அவர்களிடம் நடந்து கொள்."*

மற்றவர்கள் நம்மிடம், அன்புடனும், பொறுப்புடனும், உதவிகரமாகவும் நடந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகின்றோம்.

ஆனால் நாம் அப்படி நடந்து கொள்வதில்லை. ஏன் நாம் அப்படி நடந்து கொள்கிறோம்?

நமக்கு நம்மீது மட்டுந்தான் அக்கறை உள்ளதே தவிர, பிறர் மீது நமக்கு அக்கறை கிடையாது.

நமது சமுதாயம் முழுவதும், தன்னலம் என்ற அணுகுமுறையினால் களங்கமடைந்து விட்டது.

வேடிக்கையாக ஒரு கதையைக் கூறுவார்கள்.



ஒருமுறை தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் யார் உயர்ந்தவர் என்ற வாக்குவாதம் ஏற்பட்டது.

இறைவனிடம் சென்று முடிவு கேட்டார்கள்.

தேவர்களைத் தனியாக ஒரு இடத்திலும், அசுரர்களைத் தனியான ஒரு இடத்திலும் தங்குவதற்கு இறைவன் ஏற்பாடு செய்தார்.

ஒவ்வொருவருடைய கைகளும் மடக்க முடியாமல், நீட்டிய நிலையில் கட்டி வைக்கப்பட்டன. கைகளை எப்படி வேண்டுமானாலும் அசைத்துக் கொள்ளலாம். ஆனால் கைகளை மடக்க மட்டும் முடியாது.

ஒவ்வொருவர் கைகளிலும் அவர்களுக்கான உணவு கொடுக்கப்பட்டது.

கைகளை மடக்க முடியாமல், கைகளை வாய் பக்கத்தில் கொண்டு செல்ல முடியவில்லை. உணவினை உயரே வீசி எறிந்து, வாயினால் பிடித்துக் கொள்ளப் பலரும் முயன்றனர். இதனால், தங்கியிருந்த இடமெங்கும், உணவு சிதறி கிடந்தது.

இது அசுரர்கள் தங்கியிருக்கும் இடத்தில் நடந்தது. இறைவன் அசுரர்களை அழைத்துக் கொண்டு, தேவர்கள் தங்கி இருக்கும் இடத்துக்குப் போனார்.

தேவர்களுடைய கைகளும் அப்படியே மடக்க முடியாமல் கட்டப்பட்டிருந்தன. அவர்களுக்கான உணவு அவர்கள் கையில்தான் கொடுக்கப்பட்டிருந்தது.

எவராலும், தங்கள் கையை மடக்கி, தங்களுடைய உணவை உண்ண முடியவில்லை.

ஆனால் ஒவ்வொருவராலும், தங்களுடைய உணவை, தங்களுடைய கைகளை மடக்காமலேயே, அடுத்தவர்களுக்கு ஊட்ட முடிந்தது.

இதனால் அனைவரும் உணவை உண்டு பசி நீங்கினர்.

ஒவ்வொருவரும் தன்னுடைய உணவு, தனக்கு மட்டுந்தான் என எண்ண ஆரம்பித்திருந்தால், எல்லா உணவுகளுமே, சிந்திச் சிதறித்தான் போயிருக்கும்.

இதைப் போன்று இன்னுமொரு கதையையும் கூறுவார்கள்.

●





# 11

## நண்பர்கள் பெற்ற வரம்

நண்பர்கள் இருவர் இறைவனை நோக்கி தவம் புரிந்தார்கள். அவர்களுடைய தவத்துக்கு மகிழ்வடைந்த இறைவனும் அவர்கள் முன்னால் தோன்றி இருவருக்கும் வரம் கொடுத்தார். (சஞ்சித கர்மாவிலிருந்து எடுத்துக் கொடுத்தாரா என்றெல்லாம் கேள்வி கேட்கக் கூடாது. இது வெறும் கதை. கருத்துக்காக மட்டுமே கூறப்படும் கதை.)

*"உங்களுக்கு எது வேண்டுமானாலும் கேட்டுக் கொள்ளலாம். நீங்கள் என்ன கேட்டாலும் நடக்கும். இப்படி மூன்று முறை நீங்கள் இந்த வரத்தைப் பயன் படுத்திக் கொள்ளலாம்..."*

*"இதில் உள்ள ஒரே ஒரு நிபந்தனை என்னவென்றால், நீங்கள் எது கேட்டாலும் கிடைக்கும், ஆனால் பக்கத்து வீட்டுக்காரனுக்கு இரண்டு மடங்காகக் கிடைக்கும்."*

இப்படி ஒரு வரத்தை, அந்த ஒரு நிபந்தனையுடன் சேர்த்து இறைவன் அவர்களுக்குக் கொடுத்தார்.

நண்பர்கள் இருவரும், தாங்கள் பெற்ற வரத்தை எண்ணி சந்தோசப்பட்டவாறே, தங்களுடைய ஊர்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இருவருக்கும் பக்கத்து பக்கத்து ஊர்.

முதலாவது நபர் அன்று இரவு படுக்கும் போது, தன்னுடைய மூன்று வரங்களில் ஒன்றை பயன்படுத்திப் பிரார்த்தனை செய்தான். "*இறைவா, விடிவதற்குள் எனது குடிசை வீடு மாட மாளிகையாக வேண்டும்*", இப்படிப் பிரார்த்தனை செய்து விட்டுப் படுத்தான்.

விடிந்தது. விடிந்து பார்த்தால், அவனுடைய படுக்கையே சிறந்த வேலைப்பாட்டுடன் அமைந்திருந்தது. அவனது குடிசை வீடு பெரிய மாளிகையாக அமைந்திருந்தது. அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சி. இறைவனை வாயாரப் புகழ்ந்தான். அவனுடைய வீட்டிலுள்ளவர்களுக்கும் அதிகமான மகிழ்ச்சி.

தவத்தின் வலிமையாலும், இறைவனுடைய கருணையினாலும், சாதிக்க முடியாத ஒன்றைச் சாதித்து விட்ட பெருமை உணர்வோடு அவன் மிடுக்காக வீட்டை விட்டு வெளியே வந்தான்.

அவன் வெளியே வந்ததும்தான் அவனுடைய பக்கத்து வீடு கண்ணில் பட்டது. பக்கத்து வீட்டுக்காரனுக்கும் அவனுக்கும் நீண்ட காலமாக பேச்சுவார்த்தை கிடையாது.



குடிசையாக இருந்த அந்தப் பக்கத்து வீடு, இவனுடைய மாளிகையைப் போல் இரண்டு மடங்கு பெரிதாக வளர்ந்து விட்டிருந்தது.

அந்தப் பக்கத்து வீட்டுக்காரன், அங்கே ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்தான்.

— "*நான் எவ்வளவோ காலமாக இறைவனிடம் பிராத்தனை செய்து கொண்டிருந்தேன், எனக்கு நல்ல ஒரு வீடு வேண்டுமென்று. இறைவனே எனது பக்தியையும், பிரார்த்தனையையும் ஏற்றுக் கொண்டு, இப்படி எனது குடிசை வீட்டை மாளிகையாக்கி விட்டார்.*"

முதலாவது நபருக்கு, மகிழ்ச்சியெல்லாம் போய் விட்டது. '*நம்முடைய தவத்தின் பலன் அவனுக்குப் போய் சேர்ந்து விட்டதே*' என்று பொருமினான். அன்று இரவு அவனால் தூங்க முடியவில்லை. ஒரு வழியாக மனச் சமாதானம் அடைந்து இரண்டாவது வரம் கேட்டு பிரார்த்தனை செய்தான். "*எனக்கு அழகிய மோட்டார் கார் ஒன்று வேண்டும்.*"

மறுநாள் காலையில், அவனுடைய பங்களாவிற்குள், அழகிய மோட்டார் கார் ஒன்று, நின்று கொண்டிருந்தது.

அவனையறியாமல் அவன், பக்கத்து வீட்டை எட்டிப் பார்த்தான். அங்கே அழகிய இரண்டு கார்கள் நின்று கொண்டிருந்தன. அந்த வீட்டுக்காரன் இன்னும் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்தான்.

ஆனால் இவனுக்கோ,

உள்ளம் குமுறிக் கொண்டிருந்தது, 'நம்முடைய வரத்தின் பலன், நம்மை விட இரண்டு மடங்காக, எதிரிக்குப் போய் விட்டதே' , என்று.

அன்று இரவும் இந்த முதலாவது நபருக்கு சரியான தூக்கமில்லை. இரவு முழுவதும் சிந்தித்துப் போராடி, கடைசியில், இப்படி ஒரு வரத்தைக் கேட்டு இறைவனிடம் பிரார்த்தித்தான் : "*இறைவா! என்னுடைய ஒரு கண் குருடாக வேண்டும்.*"

இப்படி அவன் பிரார்த்தனை செய்து, தன்னுடைய கடைசியான மூன்றாவது வரத்தையும் கேட்டு முடித்தான்.

காலையில் அவன் தன்னுடைய ஒரு கண்ணை விழித்துத்தான் எழுந்தான். அவன் எழும்போதே பக்கத்து வீட்டில் கூச்சல் கேட்டது.

"*ஐயோ! எனது இரண்டு கண்களும் தெரியவில்லையே!*" என்று பக்கத்து வீட்டுக்காரன் கத்திக் கொண்டிருந்தான்.

இவனுக்கு ஒரு கண் போனது; பக்கத்து வீட்டுக்காரனுக்கு இரு மடங்காகி இரண்டு கண்களும் போய் விட்டன.

இவன் ஒற்றைக் கண்ணனாகிப் போனான். இவன், தன்னுடன் வரம் பெற்றுக் கொண்ட இன்னொரு நண்பன் எப்படி இருக்கிறான் என்று பார்க்கச் சென்றான்.

ஏற்கெனவே இவனைப்போல், அந்த இரண்டாவது நபரும் குடிசை வீட்டில்தான் வசித்து வந்தான். இவன்

 

போகும் போது, அந்த நண்பன் தன்னுடைய பெரிய மாளிகையினுள்ளிருந்து வெளியே வந்தான்.

'சரி, முதலாவது வரத்தைப் பயன்படுத்தி, பெரிய மாளிகையை நம்மைப் போலவே அடைந்திருக்கிறான்' என்று முடிவு செய்தான்.

அவனையறியாமல், அவனுடைய ஒற்றைக்கண், பக்கத்து வீட்டுக் காரனுடைய வீடு, எப்படி இருக்கிறது என்று பார்த்தது.

பக்கத்து வீட்டுக்காரனுடைய வீடும் மாளிகையாகவே இருந்தாலும், அந்த நண்பனுடைய மாளிகையின் அளவுக்குப் பெரிதாக இல்லை.

'இவனுக்கு மட்டும் என்ன ஆயிற்று? நம் மாளிகையை விட பக்கத்து வீட்டுக்காரனுக்கு இரண்டு மடங்கு பெரிய மாளிகை அல்லவா அந்த வரத்தின் படி ஏற்பட்டிருக்க வேண்டும்? என்ன விதமான குழப்படி இங்கு ஏற்பட்டு விட்டது?' ... ஒற்றைக்கண் நண்பன் குழம்பினான்.

"என்ன நடந்தது?" என்று நண்பனைக் கேட்டான்.

அவன் கூறினான். "நேற்று காலையில் பக்கத்து வீட்டுக்காரன் என்னிடம் வந்து, தனது வீட்டுக் கூரை சேதமடைந்து விட்டதாகவும், கூரையை மாற்றக் கைவசம் பணம் இல்லையென்றும், ஐநூறு ரூபாய் கடனாகக் கொடுத்து உதவும் படியும் கேட்டான். நானும் மறுநாள் தருவதாகக் கூறிவிட்டு, இரவில் அவனுக்காக ஒரு வரத்தை உபயோகித்துப் பிரார்த்தனை செய்தேன்.

அதன்படி அவனுக்கு அழகான ஒரு மாளிகை ஏற்பட்டுவிட்டது....

"அந்த வரத்தின்படி, பக்கத்து வீட்டுக் காரனுக்கு இரண்டு மடங்காகக் கிடைக்க வேண்டுமல்லவா? அவனுக்கு நான்தானே பக்கத்து வீட்டுக்காரன். அதனால் அந்த வரத்தின் பலனாக என்னுடைய வீடு இரண்டு மடங்கு பெரிய மாளிகையாகி விட்டது."

தன்னலம் மறைந்த இடத்தில்தான் சமுதாய முன்னேற்றம் ஏற்பட முடியும்.

சமுதாயம் நன்றாக இருந்தால்தான், தனிநபரும் நன்றாக இருக்க முடியும். இல்லாவிடில், தனிநபருக்கும் சமுதாயத்துக்கும் எப்போதும் போராட்டம் இருந்து கொண்டுதான் இருக்கும்.

அதனால்தான், அனைத்து மதங்களும், தனிநபரின் நற்பண்புகளுக்கும் நற்செயல்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்து வருகின்றன.

ஆயினும், தனிமனிதன், நற்செயல்களைப் புரிவதற்கும், நற்பண்புகளை வளர்த்துக் கொள்ளுவதற்கும் அக்கறை இல்லாமல் இருந்து விடுகிறான்.

தன்னலம் மிகுந்த செயல்பாடுகளினால், தீவினைகள் பலவற்றையும் புரிந்து விடுகிறான். பிறகு அதன் தீய பலன்களிலிருந்து விடுபட தெய்வங்களை நாடுவதும், பூஜைகள், பரிகாரங்கள் என்று அலைவதுமாக இருந்து விடுகின்றான்.

 

ஆனால் நன்மை புரிவதும், தீமை புரிவதும் அவனுடைய கைகளிலேயே உள்ளன. நல்லதைச் செய்ய விரும்பினால் அவனால் நிச்சயம் நல்லது செய்ய முடியும். தீயதைச் செய்ய விரும்பியதால்தான் அவனால் தீமையைச் செய்ய முடிகின்றது.

நமது கைகளில் கொடுக்கப்பட்ட வரங்கள்தாம், நமது ஆகாமியம். அதனை நாம் நல்ல முறையில் செய்யலாம்.

அதனால்தான் ஔவையார் கூறுகிறார் : "*அறம் செய விரும்பு.*"

நாமும் அறம் செய்ய விரும்ப வேண்டும். அடுத்தவர் அறஞ் செய்வதற்கும் அங்கீகாரம் கொடுக்க வேண்டும்.

நம்முடைய விருப்பமே செயலாக மாறுவதால், அறஞ்செய்யும் விருப்பமே, அறச்செயல்களாக மாறுகின்றன.





12

# விதியை மாற்றும் ஆகாமியம்

பிராரப்தத்தைச் சீரமைக்கும் வல்லமை ஆகாமியத்துக்கு மட்டுமே உண்டு. ஆகாமியம் என்பது நமது கைகளிலேயே உள்ளது.

பிராரப்தம் என்னும் விதியை வெல்லும் வலிமை, நமது கைகளிலேயே உள்ளது.

நம்முடைய ஆகாமியத்தை, நல்ல முறையில் செயல்படுத்திக் கொண்டால், நம்முடைய தீய கர்மாக்கள் எல்லாம் பலமிழந்து, நல்ல அம்சங்களே நம்மைச் சூழ்ந்திடும் நிலை ஏற்பட்டு விடும்.

'தெய்வத்தால் ஆகாது என்றாலும், முயற்சி, தன்னுடைய மெய் வருத்தக் கூலி தரும்' என்று வள்ளுவர் கூறுகிறார்.

'அதெப்படி தெய்வத்தால் முடியாமலிருக்க முடியும்?' என்று நாம் சுலபமாகக் கேட்டு விடலாம்.



தெய்வத்தால் கூட முடியாது.

அதுதான் உண்மை.

ஆகாமியத்தின் அதிகாரம் நமது கைகளில் மட்டுமே உள்ளது. அதற்கான அதிகாரம் தெய்வத்துக்குக் கூட கிடையாது.

அவர்களுடைய அதிகாரமெல்லாம், நடந்து முடிந்த சஞ்சித, பிராரப்த கர்மாக்களோடு சரி.

நடக்க வேண்டுவது அனைத்தும் நம் கையில் மட்டுமே இருக்கிறது.

வேடிக்கையாக ஒரு கதை சொல்வார்கள்.

ஒரு துறவி முக்காலமும் உணர்ந்து சொல்லும் ஆற்றல் பெற்றவராக இருந்தார்.

ஒவ்வொருவரும் தங்களது சந்தேகங்களை அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள்.

அவரைச் சோதிக்கும் எண்ணத்துடன், இளைஞன் ஒருவன், அவரிடம் வந்தான். அவன் தன்னுடைய ஒரு கையை மட்டும், மூடிக் கொண்டே வந்தான்.

அவன் கேட்டான். "*சுவாமி என்னுடைய கையில் எதை மூடி எடுத்து வந்திருக்கிறேன் என்று உங்களால் கூற முடியுமா?*"

"*நிச்சயம் கூற முடியும். நீ உன்னுடைய கையில் வண்ணத்துப் பூச்சியை மறைத்துக் கொண்டு வந்திருக்கிறாய். சரிதானே?*"

உண்மையில் அவன் வண்ணத்துப் பூச்சியைத்தான் மறைத்து எடுத்துக் கொண்டு வந்திருக்கிறான்.

"*சரிதான் சுவாமி. நீங்கள் சரியாகச் சொல்லி விட்டீர்கள். இனி அடுத்த கேள்வி. அந்த வண்ணத்துப்பூச்சி உயிரோடு இருக்கிறதா, அல்லது இறந்து விட்டதா?*"

'உயிரோடு இருக்கிறது' என்று அவர் கூறினால், அதனை அப்படியே நசுக்கிக் கொன்று, இறந்து விட்டதாகக் காட்ட வேண்டுமென்றும்,

'உயிரோடு இல்லை' என்று அவர் கூறுவாரேயானால், அதனை உயிரோடு காட்ட வேண்டும் என்று முடிவு செய்து, அவன் அவரிடம் அந்தக் கேள்வியைக் கேட்டான்.

அந்தத் துறவி சிரித்துக் கொண்டே கூறினார். "*அது உயிரோடு இருப்பதும், இல்லாததும், உனது கையில்தான் இருக்கிறது.*"

இப்படி, எல்லாமும் நமது கையில்தான் இருக்கிறது. ஆகாமியம் நமது கையில்தான் உள்ளது.

நமக்கு வேண்டியதை, எவரோ கொண்டு வந்து கொடுப்பார்கள் என, சுலபமாக எண்ணி விடுகின்றோம்.

விதியையும் மீறி, இறைவன் நமக்கு உதவுவார் என நம்பி விடுகின்றோம்.

'நற்செயல்கள் மூலம், விதியையே உருவாக்கும் வல்லமை, நமக்கு உள்ளது' என்பதை, நாம் அறியாமல் இருந்து விடுகின்றோம்.

 

ஒருவர் தன்னுடைய கையில் அழுக்கான பாத்திரம் ஒன்றை வைத்துப் பிச்சையெடுத்துக் கொண்டிருந்தார். உண்மையில் அவர் வைத்திருந்த பாத்திரம், சுத்தத் தங்கத்தால் ஆன பாத்திரம். பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள பாத்திரத்தை வைத்துக் கொண்டு, அதன் மதிப்பு தெரியாத நிலையில், பட்டினியும் பசியுமாக, பத்துபைசா நாணயங்களைப் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தார்.

நமது கையிலிருக்கும்,

ஆகாமியத்தின் உண்மையான தகுதி, என்னவென்று நமக்குத் தெரிவதில்லை. ஆகவே நாமும் சுலபமாகப் பிச்சையெடுக்கப் புறப்பட்டு விடுகிறோம்.

கடலில் நடந்த சம்பவமாக இதைக் கூறுவார்கள்.

கப்பல் ஒன்று, கடலில் சென்று கொண்டிருந்தது. எதிர்பாராத நிலையில், கப்பலிலிருந்த குடிநீரின் அளவு, வெகுவாகக் குறைந்து விட்டது. மேற்கொண்டு பயணத்தைத் தொடருமுன்பு, குடிநீரைச் சேகரித்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது.

எப்படி அதனைச் சேகரிக்கலாம் என கப்பல் கேப்டன் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது, தூரத்தே கப்பல் ஒன்று தெரிந்தது. அந்தக் கப்பலினுள்ளவர்களிடம் உதவி கேட்கலாம் என முடிவு செய்து, கப்பலை, அக்கப்பலை நோக்கிச் செலுத்தச் சொன்னார்.

அந்தக் கப்பலை நெருங்கும் போதுதான், அந்தக் கப்பல் அங்கேயே நங்கூரமிட்டு நிற்பது தெரிந்தது.

இந்தக் கப்பலின் கேப்டன், அந்தக் கப்பலுக்கு செய்தி அனுப்பினார். *“குடிதண்ணீர் கொடுத்து உதவுங்கள்.”*

பதில் செய்தி வந்தது: *“உங்கள் முழுத் தேவைக்கும் நீங்கள் குடி தண்ணீரைப் பெற்றுக் கொள்ளலாம். வாளியைப் போடுங்கள்.”*

*“வாளியைப் போட்டால் அது உங்கள் கப்பலை எட்டாது. படகை அனுப்பி வைக்கிறேன். குடிதண்ணீரை அனுப்பி வையுங்கள்.”*

*“படகை அனுப்ப வேண்டாம்! நீங்கள் நிற்கும் இடத்திலேயே வாளியைப் போடுங்கள்.”*

இப்போது இந்தக் கேப்டனுக்குக் கோபம் வந்து விட்டது. கடல் தண்ணீரை வாளியில் எடுத்துக் குடிக்கச் சொல்லி கிண்டல் செய்கிறாரா ?

*“விளையாட நேரம் இல்லை”* என்று இவர் கோபத்துடன் செய்தி அனுப்பினார்.

பதில் தந்தி வந்தது. *“விளையாடவில்லை. உண்மையைத்தான் கூறுகிறேன். நாம் இருவருமே, நன்னீர் ஊற்றின் மீது நங்கூரமிட்டுள்ளோம். நாம் நிற்கும் இடத்தில் எவ்வளவு தண்ணீர் எடுத்தாலும் அது குடிநீரே.”*

இப்படி நாம் தேடிப் போகும் தீர்வுகள் அனைத்தும், நமது காலடியிலேயே, நமது உத்தரவுக்காகக் காத்திருக்கின்றன.

●





13

# நன்றே செய்க !

எந்தப் பூட்டையும் திறந்து விடும் மாஸ்டர் சாவி, நம் கைவசமே உள்ளது. ஆகாமியம் என்னும் மாஸ்டர் சாவிக்கு உரிமையாளர் நாம் மட்டுமே.

ஆனால் நமக்கு நம்பிக்கை இல்லை. நமக்கு யாரோ வந்து உதவ வேண்டும் என்று தான் எண்ணுகிறோம். 'ஒன்று சோதிடர்கள் வந்து உதவ வேண்டும், அல்லது தெய்வங்கள் வந்து உதவ வேண்டும்.' ... இப்படித்தான் நாம் எண்ணிக் கொண்டிருக்கிறோம். நம்முடைய சுயமதிப்பு நமக்குத் தெரிவதில்லை.

நற்செயல் செய்வது, நமது பழக்கம் இல்லாமல் கூட இருக்கலாம். ஆனால் நல்ல பலன் வேண்டுமானால், நாம் நற்கருமம் செய்துதானாக வேண்டும்.

நோய் குணமாவதற்கு பத்தியச் சாப்பாடு சாப்பிடுவதைப்போல்,

நமக்கு, நற்செயல் செய்ய, விருப்பம் இல்லாவிட்டாலுங்கூட,

அவற்றை நாம் செய்துதானாக வேண்டும்.

நம்முடைய தீவினை மாற வேண்டுமானால், அதைச் சீரமைக்கும் வகையில் நற்செயல்களைச் செய்துதான் ஆக வேண்டும்.

இதுதான் நிச்சயமான வழி. நம் கையிலிருக்கும் ஒரே வழி.

தெய்வ பூஜை, ஜாதக, சோதிடம், பரிகாரங்கள், யாக பூஜைகளெல்லாம், நிச்சயமில்லாத சுற்றுவழி. பலன் கிடைத்தாலும் கிடைக்கலாம்; கிடைக்காமற் போனாலும் போகலாம்.

ஆனால் நம் கைவசமிருக்கும் நமது நேர் வழியானது,

சந்தேகமே இல்லாத,

நிச்சயமான வழி.

இதை எப்படி நம்புவது?

தெய்வத்தை நம்பலாம்; பூஜையை நம்பலாம்; பரிகாரங்களை நம்பலாம்; ஜாதக ஜோதிடங்களை நம்பலாம்.

... ஆனால் இதனை எவ்வாறு நம்புவது?



இதனை நாமே செயல்படுத்திப் பார்த்துதான் தெரிந்து கொள்ள வேண்டும். நற்செயல்களைப் புரிந்திடுவதால், நம்முடைய தீவினைகள் மாறி, நல்ல நிலை கிடைக்கிறதா இல்லையா என்பதை, நாமே சோதித்துப் பார்த்துதான் தெரிந்து கொள்ள வேண்டும்.

பொதுவாக, நாம் எதனையும் சோதித்துப் பார்க்காமல், மேலோட்டமாகப் புரிந்து கொள்ளவே விரும்புகின்றோம். ஏனெனில் நாம் கேள்விப்படுவதை எல்லாம் நடைமுறைப் படுத்தி அறிந்து கொள்வது, எல்லோருக்குமே சாத்தியம் கிடையாது.

மேலோட்டமாகப் பார்க்கும் போது, நமக்கு என்ன தோன்றுகின்றது?

பொய், பித்தலாட்டங்களைச் செய்யும் பலர், வாழ்க்கை வசதிகளுடன் நல்ல நிலையில் இருப்பதை நாம் வெளிப்படையாகவே காணுகின்றோம்.

அவர்கள் செய்யும் தீய செயல்கள் ஏன் உடனடியாக அவர்களைப் பாதிக்கவில்லை?

நற்செயல்கள் நன்மையைக் கொடுப்பது போல், தீய செயல்கள் உடனடியாகத் தீமையைக் கொடுத்து விட வேண்டுமல்லவா?

நல்ல மனிதர்கள் எத்தனை பேர், தீய விளைவுகளால் பாதிக்கப்பட்டுள்ளனர்!

இவற்றையெல்லாம் நாம் ஆய்வுக்கு எடுத்துப் பார்க்கும் போது, நம்முடைய நற்செயல்கள், நற்பலனைத் தந்து விடும் என்பதற்கு, என்ன உத்தரவாதம்?

இதுவரையிலும்,

நாம் நற்செயல்களை விரதமாக எடுத்துச் செய்து பார்த்ததில்லை. அப்படி அதனையும் ஒரு விரதமாக எடுத்துச் செய்து பார்த்தால்தான் அதில் ஏற்படும் விளைவுகள் பற்றி நமக்குத் தெரியும்.

மேலும்,

'உங்கள் வார்த்தையையும், உத்தரவாதத்தையும் நம்பி, மோசமான ஒரு செயலைச் செய்து விட்டேனே' என்று எவராவது கூறினால்,

அதில் பொருளிருக்கிறது.

ஆனால்,

'உங்கள் வார்த்தையை நம்பி,

நல்ல காரியம் ஒன்றைச் செய்து விட்டேனே' என்று, எவரும் குறைபட்டுக் கொள்ள முடியாது.

ஆகவே,

நற்செயல்களைச் செய்து, அதன் நற்பலன்களையுந்தான் சோதித்துப் பார்ப்போமே.

அந்த நற்செயல் என்பதுதான் என்ன?

முதலில் நல்லதை நினைக்க வேண்டும். நமக்கும் நல்லது நடக்க வேண்டும். மற்றவர்களுக்கும் நல்லது நடக்க வேண்டும்.



நல்லதை நினைக்கும் போதுதான், நமது செயல்களும் நற்செயலாக முடியும்.

நற்செயல்கள் எவை என்பதை, எவரும் எவருக்கும் சொல்லிக் கொடுக்கத் தேவையில்லை.

நமது மத நூல்களில் சொல்லப்படாதவைகளா? நமது பெரியோர்கள் சொல்லாதவைகளா?

அவற்றில் நமக்குச் சாத்தியமானவைகளை, நமக்குச் சாத்தியமான வகையில் செய்தால் போதும். நல்லவற்றைச் செய்ய வேண்டும் என்ற மனநிலையோடு செய்தால் போதும்.

அடுத்தவர்கள் நமக்குச் செய்யும் தீங்குகளைப் பொறுத்துக் கொள்ளுவது கூட நாம் பிறருக்கு நன்மை செய்ததாகவே ஆகும். நற்செயல்களைப் புரிந்ததாகவே ஆகும்.

நமது வருவாயில் பத்தில் ஒரு பாகத்தை நற்கருமங்களுக்குச் செலவிட வேண்டுமென்று எல்லா மதங்களுமே ஒருசேர வலியுறுத்துகின்றன. அதனால் நமக்குக் கிடைக்கும் நன்மைகளையும் பட்டியலிட்டுக் கூறுகின்றன.

நாம் செய்யும் தீயசெயல்கள், நமக்கு தீய கர்மாக்களாக வந்து சேர்ந்திடுவது உண்மையானால், நாம் செய்யும் நற்கருமங்கள் அனைத்தும் நன்மையாவே நம்மை வந்து சேர்ந்திடுமென்பது நிச்சயம்.

இதுவரை நாம் பார்த்தது, நம்முடைய கர்மா எப்படிச் செயல்படுகிறது என்பதை.

நமது அணுகுமுறை உண்மையானதா? சாஸ்திர அங்கீகாரம் உள்ளதா? இதுவரை இப்படி ஒரு விளக்கத்தை இதற்கு முன்னாலும் கொடுத்துள்ளார்களா?

எந்த அளவுக்கு இதனை நம்பிக்கைக்கு எடுத்துக் கொள்ள முடியும்?

இதை எடுத்துக் கூறுபவருக்கு, இதைக் கூறும் அதிகாரம் எப்படிக் கிடைத்தது? என்ன ஆதாரத்தைக் கொண்டு அவர் இந்த அணுகுமுறையை உபதேசிக்கிறார்?

ஒரு சராசரி மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட விபரங்களை, ஒரு சராசரி மனிதனாக இருந்து ஆய்வு செய்ததன் விளைவாகவே,

இந்த அணுகுமுறை உருவாக்கப்பட்டுள்ளது. இதுவும் வெறும் நம்பிக்கை தானா, அல்லது அறிவுபூர்வமான அணுகுமுறைதானா என்பதை,

நாமே நம்முடைய வாழ்விலேயே செயல்படுத்திப் பார்த்துக் கொள்ள முடியும். இந்த அணுமுறை தவறாகவே இருந்து விட்டாலுங் கூட,

நாம் செய்த நன்மைகள், நன்மையாகத்தான் இருக்க முடியுமே தவிர,

அவை ஒருபோதும் தீமையாக இருக்க முடியாது.

நாம் இவ்வாறு பார்த்த கர்மா அனைத்தும், அவை நன்மையான கர்மாக்களாக இருந்தாலும் கூட,



அவை நம்முடைய இலாபத்துக்காக அல்லது, நமக்கு நற்பலன் தரும் என்னும் வகையில்,

செய்யப்படும் கர்மாக்களாகும்.

இப்படி பலன் கருதி செய்யப்படும் கர்மாக்கள் அனைத்தும், காமிய கர்மாக்களாகும். புண்ணியம் கருதி செய்யப்படும் கர்மாக்களாகும்.

இது தவிர, இன்னுமொரு கர்மா கூறப்படுகிறது. அதுதான், நிஷ்காமிய கர்மா.

பலன் கருதாத கர்மாவுக்குப் பெயர்தான் நிஷ்காமிய கர்மா.

அதென்ன, நிஷ்காமிய கர்மா?

அதென்ன பலன் கருதாத கர்மா?





14

# நிஷ்காமிய கர்மா

மகாபாரதக் கதையில், பரிட்சித்து மகராஜா பற்றிய செய்தி ஒன்று கூறப்படுகிறது. அந்த பரிட்சித்து என்பவர், பிறக்கும் போது, உயிரும், உணர்வும் அற்ற சதைப் பிண்டமாக மட்டுமே இருந்தார்.

'நித்ய பிரம்மச்சாரி ஒருவருடைய கை பட்டால்தான், அவர் உயிரும், உணர்வும் பெற்ற சராசரிக் குழந்தையாக முடியும்' என்று கூறப்பட்டது.

பிரம்மச்சரியம் காத்த, எத்தனையோ தவசீலர்கள் கைகளால், அந்தக் குழந்தை உடலைத் தொடச் செய்தார்கள். ஆனால் குழந்தைக்கு உயிர் வரவில்லை.

கடைசியில், " நான் நித்திய பிரம்மச்சாரி என்பது உண்மையானால், இக்குழந்தை உயிர் பெறட்டும்," என கிருஷ்ணர் அந்தக் குழந்தையை எடுத்தார்.

 

அந்தக் குழந்தைக்கு, உயிரும், உணர்வும் ஏற்பட்டு விட்டது.

எல்லோருக்கும் ஆச்சரியம். கிருஷ்ணரை எப்போதும், பெண்களுடன் இணைத்தே பேசுவார்கள். அவர் எப்படி நித்ய பிரம்மச்சாரியாக இருக்க முடியும்?

இறை தத்துவம் பற்றிய பாடல்களுள், பின்வரும் கருத்துள்ள பாடல் ஒன்றைக் கூறுவார்கள்.

இறைவனும், இறைவியும் இணைந்து, உலக உயிர்களையெல்லாம் உருவாக்கினார்கள். ஆனால் இறைவன் பிரம்மச்சாரியாகவே இருந்து வருகிறார். இறைவி கன்னியாகவே இருந்து வருகிறார்.

இப்படிப்பட்ட பலவிதமான கதைகள் ஆன்மீக உலகில் உண்டு.

அதன் சாரம் என்ன?

நாம் எந்தச் செயல் செய்தாலும், அந்தச் செயலுக்கு உரிமையாளர் ஆகாத ஒரு தன்மை, ஆன்மீகத்தில் பேசப்படுகிறது.

கிராமத்துப் பெண்கள் சிலர் ஆற்றைக் கடந்து சென்று, ஆற்றுக்கு அந்தப் பக்கமுள்ள ஊர்களில், பால், தயிர் போன்றவற்றை விற்பது வழக்கம்.

அவர்கள் தங்கள் வியாபாரத்தை முடித்து விட்டு ஒருநாள் திரும்பும் போது, ஆற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டிருந்தது. ஆற்றைக் கடக்க வழி தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆற்றங்கரையில் அமர்ந்திருந்த முனிவர் ஒருவரின் உதவியை நாடினார்கள்.

தனது பசி நீங்க உணவு ஏதாவது கொடுத்தால், உதவி செய்வதாக அவரும் கூறினார். அவர்களிடமிருந்த மீதமான தயிர், பால், வெண்ணையெல்லாவற்றையும் அவர்கள் தாராளமாகக் கொடுக்க, அவரும் உண்டு பசி நீங்கினார்.

பிறகு அவர் ஆற்றின் அருகில் சென்று ஆற்றினை வணங்கி, "*அனைவருக்கும் அருள் புரியும் அழகிய ஆறே! நான் இன்று முழுவதும் உபவாசம் இருந்தது உண்மையானால், இந்தப் பெண்களுக்கு வழி விடுவாயாக!*" என்று பிரார்த்தனை செய்தார்.

அவர் உபவாசம் இருந்ததாகக் கூறியது பச்சைப் பொய். அவர்கள் கண் முன்புதான் அவர் எல்லாவற்றையும் உண்டு முடித்தார்.

ஆனால் அவருடைய வேண்டுதலை ஏற்றுக் கொண்ட ஆறு, அப்பெண்களுக்கு வழி விட்டது.

இந்த வேடிக்கையை அந்த முனிவருடைய சீடன் ஒருவனும் பார்த்து வியந்தான். அவன், பிறகு தன்னுடைய குருநாதரிடம் அது பற்றிக் கேட்டான்.

"*இதுதான் நிஷ்காமிய கர்மா*" என்று குரு அவனுக்குப் பதில் சொன்னார்.

"*பற்று இல்லாமல் எப்படி நாம் கர்மங்களைச் செய்ய முடியும் என்பது எனக்குப் புரிய வில்லையே குருநாதா,*" என்று சீடன் விளக்கம் கேட்டான்.



அது சம்பந்தமான விளக்கத்தைப் பெற, குரு, அந்தச் சீடனை ஜனக மகராஜாவிடம் அனுப்பி வைத்தார்.





15

# ஜனகரும் சீடரும்

பேரரசர் ஜனகர், அரசராக இருந்தாலும், ரிஷியாக இருந்தார். கர்மயோகியாக இருந்தார்.

இந்தச் சீடன் அரண்மனைக்குச் சென்ற போது, அரசர் கலா மண்டபத்தில் அமர்ந்திருந்தார். நாட்டியம், இசை அனைத்தும் அங்கே அரங்கேற்றமாகிக் கொண்டிருந்தன. அவற்றையெல்லாம் அரசர் ரசித்துக் கொண்டிருந்தார்.

ஆனால் அந்தச் சீடனுக்கு அந்த ஆடம்பரமான சூழ்நிலை கொஞ்சமும் பிடிக்கவில்லை. இருந்தாலும், பல்லைக் கடித்துக் கொண்டு அதனைப் பொறுத்துக் கொண்டான்.

நாட்டியமெல்லாம் முடிந்ததும், மன்னர் சீடன் வந்த விபரத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

 

"சரி, நிஷ்காமிய கர்மத்தைப் பற்றி உனக்குப் பிறகு விபரமாக விளக்குகிறேன். நீ காடுகளிலேயே வசித்தவன். என்னுடைய நாட்டுக்கு முதன் முறையாக வந்திருக்கிறாய். எங்கள் நாட்டுக் கடைவீதி, மிகவும் பிரசித்தமானது. அதைச் சுற்றிப் பார்த்து விட்டு வா. உன்னுடன் இரண்டு வீரர்களும் வருவார்கள். உன்னுடைய திறமையையும் நாட்டு மக்கள் பார்க்க வேண்டுமல்லவா?" என்று கூறி, இரண்டு வீரர்களை நியமித்தார்.

அவர்கள் போகும் போது, அந்த வீரர்களுக்கு கட்டளை ஒன்றைப் பிறப்பித்தார்.

"இந்த சீடனுடைய தலையில் எண்ணெய் கிண்ணம் ஒன்றை வைத்து விடுங்கள். அந்த நிலையில் அவன் பார்க்க வேண்டியதெல்லாம் பார்த்து வரட்டும். எங்கேயாவது கிண்ணம் தலையிலிருந்து நழுவி கீழே விழுந்து விட்டால், அந்த இடத்திலேயே இவனுடைய தலையை மட்டும் வெட்டிக் கொண்டு வந்து விடுங்கள். "

"அப்படி கிண்ணம் விழாத நிலையில், எண்ணெய் மட்டும் உடலில் கொட்டினால், அவனை மீண்டும் இங்கே கொண்டு வந்து தலையைத் துண்டாக்கி விடுங்கள்."

சீடன் நடுங்கி விட்டான். ஊரைச் சுற்றிக் காட்டுகிறேன் என்று, உயிருக்கல்லவா உலை வைத்து விட்டார்.



15

# ஜனகரும் சீடரும்

பேரரசர் ஜனகர், அரசராக இருந்தாலும், ரிஷியாக இருந்தார். கர்மயோகியாக இருந்தார்.

இந்தச் சீடன் அரண்மனைக்குச் சென்ற போது, அரசர் கலா மண்டபத்தில் அமர்ந்திருந்தார். நாட்டியம், இசை அனைத்தும் அங்கே அரங்கேற்றமாகிக் கொண்டிருந்தன. அவற்றையெல்லாம் அரசர் ரசித்துக் கொண்டிருந்தார்.

ஆனால் அந்தச் சீடனுக்கு அந்த ஆடம்பரமான சூழ்நிலை கொஞ்சமும் பிடிக்கவில்லை. இருந்தாலும், பல்லைக் கடித்துக் கொண்டு அதனைப் பொறுத்துக் கொண்டான்.

நாட்டியமெல்லாம் முடிந்ததும், மன்னர் சீடன் வந்த விபரத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டார்.



*"சரி, நிஷ்காமிய கர்மத்தைப் பற்றி உனக்குப் பிறகு விபரமாக விளக்குகிறேன். நீ காடுகளிலேயே வசித்தவன். என்னுடைய நாட்டுக்கு முதன் முறையாக வந்திருக்கிறாய். எங்கள் நாட்டுக் கடைவீதி, மிகவும் பிரசித்தமானது. அதைச் சுற்றிப் பார்த்து விட்டு வா. உன்னுடன் இரண்டு வீரர்களும் வருவார்கள். உன்னுடைய திறமையையும் நாட்டு மக்கள் பார்க்க வேண்டுமல்லவா?"* என்று கூறி, இரண்டு வீரர்களை நியமித்தார்.

அவர்கள் போகும் போது, அந்த வீரர்களுக்கு கட்டளை ஒன்றைப் பிறப்பித்தார்.

*"இந்த சீடனுடைய தலையில் எண்ணெய் கிண்ணம் ஒன்றை வைத்து விடுங்கள். அந்த நிலையில் அவன் பார்க்க வேண்டியதெல்லாம் பார்த்து வரட்டும். எங்கேயாவது கிண்ணம் தலையிலிருந்து நழுவி கீழே விழுந்து விட்டால், அந்த இடத்திலேயே இவனுடைய தலையை மட்டும் வெட்டிக் கொண்டு வந்து விடுங்கள். "*

*"அப்படி கிண்ணம் விழாத நிலையில், எண்ணெய் மட்டும் உடலில் கொட்டினால், அவனை மீண்டும் இங்கே கொண்டு வந்து தலையைத் துண்டாக்கி விடுங்கள்."*

சீடன் நடுங்கி விட்டான். ஊரைச் சுற்றிக் காட்டுகிறேன் என்று, உயிருக்கல்லவா உலை வைத்து விட்டார்.

ஆனாலும் அரசரை மீறி அவனால் எதுவும் செய்ய முடியவில்லை. விதியை நொந்தவாறே அவன் அந்த வீரர்களுடன் சென்றான்.

வீரர்கள் அந்தச் சீடன் தலையில் ஒரு பாத்திரத்தை வைத்து அதில் ததும்பத்ததும்ப, எண்ணெயையும் ஊற்றி விட்டனர்.

பாத்திரத்தைக் கைகளால் பிடிக்கக் கூடாது என்று வேறு கூறி விட்டனர். இந்த நிலையில் ஊரை வேறு சுற்றிப் பார்க்க வேண்டுமா என்ன? வேறு வழியில்லாமல் அவர்களுடன் சென்றான்.

கடை வீதிகளையெல்லாம் கூட்டிச் சென்று காட்டினார்கள். கூட்டத்திலுள்ளவர்கள் எவராவது மோதிப் பாத்திரத்தைத் தட்டி விட்டால் என்ன செய்வது? அந்தக் கணத்திலேயே, அரச கட்டளைப்படி அவனுடைய தலையை அப்புறப்படுத்தி விடுவார்கள்.

மிகவும் ஜாக்கிரதையாக நடந்து சென்றான்.

அப்பாடா, ஒருவழியாக பார்க்க வேண்டியதெல்லாம் பார்த்து முடித்தாகி விட்டது. இனி வந்த மாதிரியே திரும்பி விட வேண்டியதுதான்.

அவன் சாவகாசமாகத் திரும்பும் போதுதான் அந்த அசம்பாவிதம் நடந்து விட்டது. பாத்திரம் விழா விட்டாலும், பாத்திரத்திலுள்ள எண்ணெய் ததும்பி, அவனுடைய உடலில் கொட்டி விட்டது.

இனி என்ன? மரணந்தான். இங்கேயே செத்தாலும் ஒன்றுதான், அரண்மனைக்குச் சென்று செத்தாலும்



ஒன்றுதான். சீடன் அந்தப் பாத்திரத்தை எடுத்து கீழே வீசி எறிந்தான்.

எந்த வழியாக, எதையெல்லாம் பார்த்துக் கொண்டு வந்தார்களோ அதே வழியாக அவற்றையெல்லாம் மீண்டும் பார்த்தவாறே அரண்மனைக்குத் திரும்பினார்கள்.

அவனைக் கொலைக்களத்துக்குக் கூட்டிச் சென்றார்கள். கொலைத் தண்டனையை நிறைவேற்றும் முன், மன்னர் அவனைப் பார்க்க வந்தார்.

மன்னர் அவனிடம் கேட்டார்.

"*எப்படியும் நீ சாகப் போகிறாய். சாவதற்கு முன்னால் நீ என்னதான் பார்த்தாய் என்பதையும் கூறினால், நானும் எனது நாட்டைப் பற்றிய உன்னுடைய கருத்து எப்படி இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாமல்லவா?*"

"*எதை அரசே என்னால் பார்க்க முடியும்? போகும் போது எந்த நேரத்திலும் பாத்திரம் விழுந்து, தலை போய் விடும் என்ற நிலை. திரும்ப வரும்போது மரணம் உறுதியாகி விட்டது. எதைப் பார்த்துதான் என்ன இலாபம்?*" ... அந்த சீடன் விரக்தியாகக் கேட்டான்.

மன்னர் சிரித்தார்.

"*சரி உன்னுடைய மரண தண்டனையை ரத்துச் செய்து விட்டேன். இனி இன்னும் ஒருமுறை நிதானமாகக் கடைவீதிகளைச் சுற்றிப் பார்த்து விட்டு வா!*"

"*மிகவும் நன்றி அரசே!*" உணர்ச்சிப் பெருக்குடன் நன்றி கூறிய சீடன், அந்தக் காவலருடன் புறப்பட்டான்.

போகும் போது, "*இனியும் ஏதாவது நிபந்தனை உண்டா அரசே?*" என்று கேட்டான்.

"*எந்த நிபந்தனையும் கிடையாது! நிம்மதியாகப் பார்த்து விட்டு வா!*"

சீடன் மகிழ்ச்சியுடன் அங்கிருந்து சென்றான். எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பினான்.

"*என்ன பார்த்து விட்டு வந்து விட்டாயா?*"

"*ஆம் அரசே!*"

"*நீ பார்த்து வந்தது போதாது. இன்னும் ஒருமுறை சென்று வா! இந்த முறை காவலர்கள் எவரும் உன்னுடன் வர மாட்டார்கள். பகல் முழுதும் இங்கு வர வேண்டாம். அங்கேயே தங்கியிருந்து, உனக்கு எதையெல்லாம் பார்க்கத் தோன்றுகிறதோ அதையெல்லாம் பார்த்து விட்டு மாலையில் என்னைச் சந்திப்பதற்கு வா! ஆனால் நீ போகும் இடமெங்கும் உனது தலையில் அந்தக் கிண்ணத்தை வைத்திருக்க வேண்டும். கிண்ணம் விழுந்தாலும் குற்றம் கிடையாது, விழாவிட்டாலும் குற்றம் கிடையாது.*"

... இப்படி கூறி மன்னர் அவனை அனுப்பி விட்டார்.



சீடனும் அப்படிச் சென்று பார்த்து விட்டு மாலையில் திரும்பினான்.

இப்போது அவனுடைய அனுபவத்தைக் கூறும்படி கேட்டார்.

சீடனும் சொன்னான். "*முதல்முறை செல்லும் போது எனது கவனமெல்லாம் எண்ணைக் கிண்ணம் விழுந்து விடக் கூடாதே என்பதில் பதிந்திருந்தது. அதனால் எதையும் என்னால் பார்க்க முடியவில்லை. திரும்பும் போது எண்ணை சிந்தி விட்டது. மரண பயத்துடன் திரும்பியதால் திரும்பும் போதும் எதுவும் பார்க்க முடியவில்லை ....*"

"*இரண்டாவது முறை செல்லும் போது நீங்கள் எனது மரண பயத்தை ரத்து செய்து விட்டீர்கள். அதனால் எனது மகிழ்ச்சியை என்னால் தாங்க முடியவில்லை. அந்த உணர்வுடன் செல்லும் போது, எல்லோருமே மகிழ்ச்சியுடன் இருப்பதாகத்தான் தோன்றியதேயொழிய, குறிப்பாக எதனையும் பார்க்க முடியவில்லை ....*"

"*மூன்றாவது முறை செல்லும் போது, கிண்ணத்தைச் சுமந்து சென்றாலும் எனக்கு பதட்டம் ஏற்படவில்லை. கிண்ணம் அசைந்தாலும் எனக்கு பயம் ஏற்படவில்லை. யாராவது என்னை இடித்து விட்டாலும் எனக்கு சஞ்சலம் ஏற்படவில்லை. எல்லாவற்றையும் என்னால் ஓரளவு பார்க்க முடிந்தது. நான் பார்த்தவைகளையெல்லாம் ஓரளவு புரிந்து கொள்ள முடிந்தது.*"

... சீடன் கூறி முடித்தான்.

இப்போது அரசர் அவனுக்கு விளக்கம் கொடுத்தார்.

*"நமக்கு மனம் என்று ஒன்று இருக்கிறது. அந்த மனதில்தான் இன்ப துன்ப அனுபவங்கள் ஏற்படுகின்றன. அந்த மனது, புற உலகத்தோடு தொடர்புடையதாக இருந்தாலும் அது நமக்குக் கட்டுப்பட்டதல்ல. நமது மனது அதுபோக்கில்தான் இயங்கும். சில வேளைகளில் நாம் நமது மனதை ஓரளவு கட்டுப்படுத்தி விட முடியும். அதனால் நாம் நமது மனதை நிரந்தரமாகக் கட்டுப்படுத்தி விட முடியும் என்ற ஒரு தவறான முடிவுக்கு வந்து விடுகிறோம்...."*

*"நமது மனது, நமது இயல்பின் வெளிப்பாடாக இருந்தாலும், அது அதுபோக்கில்தான் இயங்குகிறது. எண்ணைக் கிண்ணந்தான் உனது மனது. அதற்கு நீ பொறுப்பேற்றுக் கொண்டதால் உனக்கு இன்ப துன்ப அனுபவங்கள் ஏற்பட்டன. எதையும் உன்னால் கவனிக்க முடியவில்லை. உனக்கு அதிக மகிழ்ச்சி ஏற்படும் போது கூட உன்னால் எதனையும் கவனிக்க முடியவில்லை...".*

*"கடைசியில் நீ கிண்ணத்தைச் சுமந்து செல்லும் போது, உனக்கு எந்தப் பொறுப்பும் இல்லை. கிண்ணம் கீழே விழுந்தாலும் ஒன்றுதான், கீழே விழாமல் இருந்தாலும் ஒன்றுதான். உலகத்தவர் உனக்கு, ஒரு பாதிப்பை ஏற்படுத்தினாலும் கூட, அது ஒரு பெரிய பாதிப்பாக இருக்கவில்லை...."*

 

"உலக நிகழ்வுகள் அனைத்தும், புதிது புதிதாகவே ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. அக நிகழ்வுகளும், அவைபோக்கில், புதிது புதிதாகவே ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆனால் அக நிகழ்வில் மட்டுமே, நினைவில் வைத்துக் கொள்ளும் அம்சம் உள்ளது. நினைவில் வைத்துக் கொள்ளும் அம்சத்தின் காரணமாகவே, நமது மன நிகழ்வுகளும், புற நிகழ்வுகளும், ஒரு தொடர் நிகழ்வைப்போல் தோற்றமளித்து விடுகின்றன...."

"நமது மன இயக்கம் இப்படித் தேக்கமடையாத நிலையில், நமது மன இயக்கமும் சுதந்திரமடைந்து விடுகின்றது. மன இயக்கமும் முக்கியத்துவம் பெறாத நிலையில், அங்கு "நான் செய்தேன்" என்ற கர்த்தா இல்லாமல் போய் விடுகிறது. ஒவ்வொரு செயலும், அந்தந்த சூழ்நிலையில், அதுபோக்கில், தாமாக நிகழும் செயலாகி விடுகின்றது. நமது செயலுக்கு உரிமை கொண்டாடும் எவரும், அங்கு இல்லாமல் போய் விடுகின்றார்."

... இப்படி அரசர் அந்த சீடனுக்கு விளக்கம் கொடுத்தார்.

●



16

# தெய்வீக கர்மா

செய்பவன் என்று எவரும் இல்லாத நிலையில், செய்யப்படும் கர்மாக்கள் அனைத்தும் நிஷ்காமிய கர்மாக்கள் என்று கூறப்படுகின்றன.

காமியம் என்பது காம வசப்பட்டது அல்லது ஆசை வசப்பட்டது, என்று பொருள்.

நிஷ்காமியம் என்பது, ஆசையின் காரணமாக ஏற்படாத ஒன்றாகும்.

அனைத்து நிகழ்வுகளும், தாமாக நிகழ்வதாக அமைந்திடும்போது,

அவை நிஷ்காமிய நிகழ்வுகளாக ... நிஷ்காமிய கர்மாவாக, அமைந்திடுகின்றன.

நிஷ்காமிய கர்மா என்பது, தானாக நிகழ்வது. சூழ்நிலைக்கேற்ப, தாமாக நிகழ்வது.



நாம் நம்முடைய மன இயக்கத்தைப் புரிந்து கொண்டு விட்ட நிலையில், நமக்குள் ஏற்படும் அகப் போராட்டங்கள் அனைத்தும் முடிந்து விட்ட நிலையில், நமக்கு ஏற்படும் கர்மாக்கள் அனைத்தும், நிஷ்காமிய கர்மாக்களாகி விடுகின்றன.

நம்முடைய செயல்கள் அனைத்தும், நற்செயல்களாக மட்டுமே இருந்து விடுகின்றன.

நிஷ்காமிய கர்மா என்று நாம் குறிப்பிடும் போது, இது ஏதோ ஒரு உப்புச்சப்பற்ற நிலை போன்று தோற்றமளிக்கிறது. விருப்பமோ, வெறுப்போ இல்லாத ஒரு தோற்றத்தை ஏற்படுத்துகிறது.

நமக்கு வேண்டியது கிடைத்தால் மகிழ்ச்சி அடைவதும், வேண்டியது கிடைக்காவிட்டால் துக்கமடைவதும், நமது இயல்பு. இதுதான் நம்முடைய மனதின் இயல்பு.

இந்த இரண்டுமே இல்லாது போய் விட்டால் என்ன ஆகும்? நாம் ஒரு நடைப்பிணம் போல் ஆகி விட மாட்டோமா?

மகிழ்ச்சியில் மகிழ்வடையாமலும், துக்கத்தில் துக்கமடையாமலும் இருந்தால், அது என்ன வாழ்க்கை?

ஞானிகள் அனைவரும் இந்த நிஷ்காமிய கர்மாவில்தாம் செயல்படுகின்றனர். அவர்கள் செயல்கள் அனைத்தும், அவர்கள் செயலாக இருப்பதில்லை. அவை அனைத்தும் தாமாக நடக்கும் தற்செயல்களாக அமைந்து விடுகின்றன.

ஆகாமிய கர்மா என்றால் என்னவென்று, நாம் ஏற்கெனவே தெளிவாகப் பார்த்து விட்டோம்.

ஒரு தனி மனிதனைப் பொருத்த அளவில், ... ஒரு சராசரி மனிதனைப் பொருத்த அளவில், அவன் ஆகாமிய கர்மாவை நல்ல முறையில் செயல்படுத்தினால் போதும்.

அவனுடைய தீய சூழ்நிலைகள் அனைத்தும் மாறி விடும். அவனும் அவனது குடும்பமும் வாழ்வாங்கு வாழ்ந்திடும் நல்ல சூழ்நிலை உருவாகி விடும்.

மனிதர்களுள் மாணிக்கமாக ஒவ்வொருவரும் திகழ்ந்து விடலாம். 'இன்பமே என்னாளும்; துன்பமில்லை' என்று, ஒவ்வொருவரும் கூறுவதாக அமைந்து விடும்.

இப்படி ஒவ்வொருவரும், நல்ல நோக்கங் களுடனும், நல்ல பண்புகளுடனும் தங்களுடைய ஆகாமிய கர்மாவைச் செயல்படுத்துவார்களேயாயின்,

ஒவ்வொருவரும்,

தங்களது விதியை,

தாங்களே நிர்ணயிப்பவர்களாகி விடுவார்கள்.

ஒவ்வொருவரது குடும்பமும், நற்பண்புள்ள குடும்பமாகி விடும். பிறகு சமுதாயத்தைப் பற்றி கேட்க வேண்டியதில்லை.

தனி மனிதர்களால் ஆக்கப்பட்டதுதானே சமுதாயம்?

 

அதுவும் நற்பண்புகள் மிகுந்த சமுதாயமாகி விடும்.

ஒரு புலவர் நயம்படக் கூறுவார் : ‘ அந்த நாட்டில் எவரும் எவருக்கும் பிச்சையிட மாட்டார்கள். ஏனெனில் அங்கே பிச்சைக்காரர்களே கிடையாது. ’

இப்படி, மனித குலத்துக்கான ஒரே தீர்வு,

நாம் நமது ஆகாமியத்தை,

நல்ல முறையில் அணுகுவதுதான்.

ஆனால் நிஷ்காமிய கர்மா என்பது வேறு. நிஷ்காமிய கர்மா என்பது மனித குலத்துக்கு உரியதானதல்ல.

ஏனெனில் நிஷ்காமிய கர்மாவைச் செயல்படுத்தும் ஒருவரை, மனிதராகவே கருத முடியாது.

நிஷ்காமிய கர்மா என்பது தெய்வீகமானது. நிஷ்காமிய கர்மாவில் ஈடுபடும் அனைவரும் தெய்வங்களாகவே மாறி விடுகின்றனர்.

அவர்களுடைய செயல்கள் அனைத்தும் தற்செயல்களாகி விடுகின்றன.

“*எதனை நீ அடைந்தால், வேறு எதனையும் அடையத் தேவையில்லையோ, அதுதான் இது. அதுதான் இந்த நிஷ்காமிய கர்மா. அதுதான் இந்த முக்தி பெற்ற கர்மா*” ... இப்படி நமது ஆன்மீக சாஸ்திரங்கள் இது பற்றிக் கூறுகின்றன.

இப்படி ஒவ்வொருவரும் நிஷ்காமிய கர்மாவில் ஈடுபட்டவர்களாக இருந்து விட்டால், .... அது எப்படி இருக்கும்?

அனைவருமே இன்ப துன்பங்களைப் புறக்கணித்து துறவிகளாக ஆகி விட மாட்டார்களா?

.... இப்படித்தான் பொதுவாகக் கேட்கத் தோன்றுகிறது.

மேலும் சிலருக்கு வேறு விதமான கருத்துக்களும் தோன்றுவதுண்டு, 'இவை அனைத்தும் மனித முயற்சிக்கு அப்பாற்பட்டவை; ஒரு சராசரி மனிதனுக்கு சாத்தியம் இல்லாதவை.'

... இப்படிக் கூட எண்ணத் தோன்றுவதுண்டு.





## 17

## ஞானிக்குச் செயல் உண்டா ?

ஞானிகளாக ஒவ்வொருவரும் மாறி விட்டால், அவர்கள் எந்தச் செயலிலும் ஈடுபடாமல் போய் விட மாட்டார்களா? எல்லா செயல்களும் அவர்களுக்கு, தாமாக ஏற்படும் தற்செயல்களாகப் போய் விடும்போது, அவர்களுக்கென்று தனிப்பட்ட கடமை கூட இல்லாமல் போய் விடுமல்லவா?

இப்படி ஒரு கேள்வி நமக்கு எழுந்தால், அதுவும் நியாயமாகவே உள்ளது.

இது சம்பந்தமாக ஒரு ஜென் கதையைக் கூறுவார்கள்.

ஜென்குரு ஹியாகோ .... ஜோ என்பவருடைய காலத்தில் நடந்ததாக இப்படி ஒரு சம்பவம் கூறப்படுகிறது.

இந்த சம்பவம் எந்த அளவுக்கு உண்மை என்பது தெரியவில்லை. ஆனால் அதில் கூறப்படும் செய்தி மட்டும் சத்தியமான உண்மை.

அந்த ஜென் மாஸ்டர் உபதேசம் செய்யும் போது, கூட்டத்தின் ஓரத்தில் ஒருவர் தினமும் உட்கார்ந்து கூட்டம் முடியும் வரை உபதேசத்தை வழக்கமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். எல்லோரும் போன பிறகுதான் அவர் அங்கிருந்து போவார். அதுமட்டுமல்ல அவர் தன்னை யார் என்று காட்டக் கூடாது என்று முடிவு செய்த நிலையில் தன்னுடைய தலையையும், உடலையும் கூட மூடிக் கொண்டிருந்தார். எவரும் அவரைப் பற்றிக் கவலைப் படவில்லை. அவர் மிகவும் ஒதுங்கி உட்கார்ந்திருந்ததால் எவருடைய கவனத்தையும் அவர் கவரவில்லை.

ஆனால் ஜென்குரு மட்டும் தினமும் அவரை கவனித்துக் கொண்டுதான் வந்தார். பேசி முடித்ததும், குரு அந்த இடத்தை விட்டுப் போய் விடுவதால் அந்த நபர் எப்படிப் போகிறார் என்பதும் அவருக்குத் தெரியவில்லை.

இது பல நாட்களாக நடந்து வந்தது. ஜென்குரு ஒரு நாள் அவர் யாரெனத் தெரிந்து கொள்ளுவதில் அக்கறை கொண்டார். அதனால் உபதேசத்தை முடித்த பிறகும் அவர் தன்னுடைய இடத்திலேயே உட்கார்ந்திருந்தார். அந்த நபரும் கூட்டம் அனைத்தும் போகட்டும் எனக் காத்திருந்தார்.

 

கூட்டம் அனைத்தும் கலைந்த நிலையில் இந்த நபரும் போவதற்கு ஆயத்தமானார். அந்நிலையில் ஜென்குரு, நடந்து சென்று அந்த நபரைச் சந்தித்தார்.

முகத்தை மூடிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் அந்த நபரிடம், "*அன்பரே, தாங்கள் யார்?*" என்று கேட்டார்.

அந்த நபர் தனது துணியை விலக்காமலேயே பதில் கூறினார் : "*நானும் ஒரு ஜென் குருதான் சுவாமி! வெளிப்படையாக வந்து உங்கள் உரையைக் கேட்க முடியாத நிலையிலிருப்பதால் நான் துணியைப் போட்டுக் கொண்டு வந்திருக்கிறேன். எனக்கு ஒரு கேள்விக்கு விடை தெரிய வேண்டும். பதில் சொல்வீர்களா சுவாமி ?*"

"*கேளுங்கள், எனக்குத் தெரிந்ததைச் சொல்கிறேன்.*"

"*எனக்குத் தெரிய வேண்டியது இதுதான் : ஞானிக்கு கடமைகள் உண்டா? உலகில் உள்ள காரணகாரிய விதிகளுக்கு ஞானி கட்டுப்பட்டவரா?*" ... அவர் கேள்வி கேட்டார்.

"*ஞானிக்கும் கடமை உண்டு. காரணகாரிய விதிமுறைகளுக்கு ஞானியும் கட்டுப்பட்டவரே.*"

"*எதனால் அப்படிக் கூறுகிறீர்கள்?*"

"*உலகம் என்பது காரணகாரிய விதிமுறையை அனுசரித்து இயங்கக் கூடியது. உலகத்தோடு நாம்*

*வாழும் வரை, நாம் உலகத்துக் கடமைகளில் பங்கெடுத்து ஆக வேண்டும். நமது சுதந்திரம் அனைத்தும் நமது மனதளவிலேயே ஆகும். அங்கு நமக்கு எந்தக் கட்டுப்பாடும் கிடையாது. உலகத்தைப் பொருத்த அளவில் நாம் கட்டுப்பட்டவர்களே. காரணகாரிய விதிமுறைகள் நம்மையும் கட்டுப்படுத்தவே செய்யும். மனதளவில் நாம் சுதந்திரம் அடைந்து விட்ட காரணத்தினால், உலகக் கடமைகள் நமக்கு இருந்தாலுங் கூட, அது நமக்குப் பாரமாக இருக்காது. அதனால், உலகத்தில் கூட, நமக்கு எந்தக் கடமையும் கிடையாதோ என்று எண்ணத் தோன்றி விடும்"* ... ஹியாகோ – ஜோ இப்படி அவருக்கு விளக்கம் கொடுத்தார்.

துணிக்குள் இருந்த ஜென்குருவும், "*நீங்கள் கூறுவது எனக்குத் தெளிவாகப் புரிந்து கொண்டது சுவாமி! இனி நான் என்னுடைய கதையைக் கூறுகிறேன். நான் கேட்ட இதே கேள்வியை என்னுடைய மாணவர்கள் என்னிடமும் கேட்டார்கள். மனதளவில் சுதந்திரம் ஏற்பட்ட காரணத்தினால் உலகக் கடமைகளில் உள்ள ஈடுபாடும் குறைந்து விட்டது. ஆகவே 'ஞானிக்குக் கடமை எதுவும் கிடையாது; காரணகாரிய விதிமுறை எதுவும் ஞானியைக் கட்டுப்படுத்தாது' என்று அவர்களிடம் கூறி விட்டேன். அந்நிலையில் நான் நரியாக மாறி விட்டேன். ஐநூறு பிறவிகளாக நான் நரியாகப் பிறந்து வருகிறேன். இத்தகைய கூட்டங்களில் கலந்து வருகிறேன். கேள்வியைக் கேட்டு பதில் பெறும் சந்தர்ப்பம் இன்றுதான் எனக்குக் கிடைத்தது."* அவர் கூறி முடித்து, தனது துணிகளை விலக்கினார்.



அங்கே அழகிய கம்பீரமான ஒரு நரி நின்று கொண்டிருந்தது. அதன் வசீகரம் அனைவரையும் கவரும் படியாக இருந்தது.

அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த நரியின் உடல் பொன்னிறமாக மாறிக் கொண்டிருந்தது.

அந்த நரி ஜென்குருவுக்கு நன்றி தெரிவித்தது. "*எனது பிறவியின் நோக்கம் முடிவடைந்து விட்டது. நான் விடுதலை அடைந்து விட்டேன் . தயவு செய்து எனது உடலை ஒரு ஜென் துறவிக்குரிய மரியாதையுடன் அடக்கம் செய்து விடுங்கள்*" என்று கூறியவாறே அந்த நரி ஜென் குருவை வலம் வந்து கால்களில் பணிந்து வணங்கியது. அத்துடன் அதன் உயிரும் பிரிந்து விட்டது.

இந்தக் கதை நமக்குக் கூறும் செய்தி மிகவும் வெளிப்படையானது.

அனைவருக்கும் செயல் உண்டு. ஞானிக்கும் செயல் உண்டு; தெய்வங்களுக்கும் செயல் உண்டு.

ஆனால் அவற்றைச் செயல்படுத்தும் செயல் முறைதான் வித்தியாசமானது.







# நடைமுறை ஞானிகள்

நமது நூல்களோடும், கருத்துக்களோடும் தொடர்புடைய பலர் தொழில் முனைவோர்களாக இருக்கிறார்கள். அவர்கள், ஏற்கெனவே பல ஆன்மீக அமைப்புக்களோடு தொடர்பில் இருந்தவர்கள்.

அவர்கள், ஆன்மீக முயற்சிகளின் காரணமாகவும், அவர்கள் மேற்கொண்டிருக்கும் தொழில்களில் உள்ள பிரச்சினைகளின் காரணமாகவும், அவர்கள் அனைவருமே ஒரே முடிவுக்குத்தான் வந்திருக்கிறார்கள்.

அதாவது, தாங்கள் மேற்கொண்டுவரும் தொழில்களைக் குறைத்துக் கொண்டோ, அல்லது தொழில்களிலிருந்து விடுபட்டோ, முழுநேரமாக ஆன்மீகத்துக்குள் வந்து விடுவதிலேயே ஆர்வமாக இருந்து வந்திருந்தார்கள்.

 

நமது கருத்துக்களை உள்வாங்கிய நிலையில், அவர்களுக்கு ஏற்பட்ட தெளிவின் காரணமாக, அவர்களுக்கு ஒரு விடுதலை ஏற்பட்டு விட்டது.

அந்நிலையில் ....

ஆன்மீகத்தின் தேடல் அவர்களுக்கு முற்றுப் பெற்று விட்டது. நிஷ்காமிய கர்மாவாக, தங்களுடைய பணிகளில் ஈடுபடும் வல்லமை ஏற்பட்டு விட்டது.

தங்களுடைய தொழில்களைப் பாதியாகக் குறைத்து விட வேண்டும் என்று முடிவு செய்தவர்களெல்லாம், தங்களுடைய தொழில்களை இரண்டு மடங்கு, மூன்று மடங்காக்கிக் கொண்டு விட்டார்கள்.

அப்படித் தங்கள் தொழில்களைப் பல மடங்காக்கும் போது, அவர்களுடைய பிரச்சினைகளுமல்லவா பல மடங்காக வேண்டும்?

ஆனால் அதுதான் தலை கீழாகப் போய் விட்டது.

அவர்களுடைய பிரச்சினைகள் மட்டும் பல மடங்காகக் குறைந்து விட்டன.

தொழில்களையே மூட வேண்டிய மனஅழுத்தத்தில் இருந்தவர்களெல்லாம், தங்கள் தொழிலில் புதிய வேகத்துடன் செயல்பட்டு, படுத்துக் கிடந்த நிறுவனங்களைத் தூக்கி நிறுத்தி விட்டனர்.

ஏன் இப்படி நிகழ்ந்துள்ளது? இதனுடைய நடைமுறை அம்சந்தான் என்ன?

மெய்ஞ்ஞான நிலை என்பது, சமாதி நிலை அல்ல. அது ஓர் உறைநிலை அல்ல.

ஆனால் பெரும்பாலும், மெய்ஞ்ஞான நிலை என்பதை, இப்படி ஓர் உறை நிலையாகச் சித்திரித்து விட்டார்கள். ஒரு சூன்யமாக விவரித்து விட்டார்கள். ஞானிகள் அனைவரும் கோமா நிலையில் தான் இருக்க வேண்டும் என எண்ணி விடுகிறார்கள். நம்முடைய உணர்ச்சிகள் அனைத்தும் செத்து மடிந்து விட வேண்டும் என எண்ணி விடுகிறார்கள். ஒரு சராசரி மனிதனுக்குச் சாத்தியமில்லாத நிலையாக எண்ணி விடுகிறார்கள்.

ஆனால் அது,

ஒரு சராசரி மனிதனாலுங் கூட அடைந்து விடக் கூடிய சர்வ சாதாரணமான நிலையாக உள்ளது.

ஆகாயம் என்றால் என்னவென்பது, நம் அனைவருக்கும் தெரியும். *"ஆகாயம் என்பது சாதாரணமானதா அல்லது பிரம்மாண்டமானதா?"* என்று நாம் கேட்பதாக வைத்துக் கொள்வோம்.

அதற்கு நம்முடைய பதில் என்ன?

ஆகாயம் என்பது மிகவும் பிரம்மாண்டமானது தான். அதில் எந்த சந்தேகமும் கிடையாது. அண்ட சராசரங்களும் இந்த ஆகாயத்தில்தான் மிதந்து கொண்டிருக்கின்றன.

சில நட்சத்திரங்களிலிருந்து புறப்பட்ட ஒளியானது பல ஆண்டுகளாகப் பயணம் செய்தும், இன்னும் பூமியை

 

அடையவில்லை என்று கூறப்படுகிறது. அவ்வளவு விரிந்து பரந்த அண்ட சராசரம் இந்த ஆகாயத்தில் மிதந்து கொண்டிருக்கிறது என்ற கூற்று கூட முழுவதும் சரியென்று கூறிவிட முடியாது. ஏனெனில், மொத்த பிரபஞ்சமும், இந்த ஆகாயத்தில், தொடர்ந்து ஏதோ ஒரு திசையில், பயணித்துக் கொண்டிருக்கிறது. இந்த ஆகாயம் முடிவற்றுள்ளது. அவ்வளவு பிரம்மாண்ட மாயுள்ளது. ஆனாலுங்கூட, நாம் அந்த ஆகாயத்தோடு தொடர்பு கொள்ளும் வகையில், அது எளிமையான தாகவும் உள்ளது.

நிஷ்காமிய கர்மா, முக்திநிலை அல்லது மெய்ஞ்ஞான நிலை என்பதெல்லாம் உண்மையிலேயே பிரம்மாண்டமான நிலைதான்; மிகவும் உன்னதமான நிலைதான். ஆனால், ஒரு சராசரி மனிதன் கூட அடைந்து விடக் கூடிய அளவில்,

அது ஒரு சர்வ சாதாரணமான நிலையாகவும் உள்ளது.

கூட்டங்கள் நடத்தும் போது சிலர் கேள்விகள் கேட்பதுண்டு.

*"உங்களுக்கு கோபம் ... பயம் ... துக்கம் போன்ற உணர்ச்சிகள் ஏற்படுமா?"*

அதாவது அவர்களது பார்வையில், ஞானிகளுக்கு எந்த விதமான உணர்ச்சிகளும் ஏற்படக் கூடாது என்ற எதிர்பார்ப்பு உள்ளது.

*"ஒரு சராசரி மனிதனுக்கு ஏற்படும் உணர்ச்சிகள் மற்றும் அனுபவங்களுக்கும், உங்களுக்கு ஏற்படும் உணர்ச்சிகள் மற்றும் அனுபவங்களுக்கும் என்ன வித்தியாசம்?"*

... இப்படிப் பலர் கேட்பதுண்டு.

ஞானிகளுடைய மன இயக்கத்தை அனைவரும் ஒரு புதிராகவே எண்ணி வருகின்றனர். அதனை உறுதிப்படுத்தும் வகையில், அவர்கள் கதைகள் பலவற்றையும் கைகளில் வைத்திருக்கிறார்கள்.

அந்தக் கதைகள் பல மிகவும் இரசிக்கும் படியாக அமைந்துள்ளன.

ஒரு துறவி அம்மணமாகத் தெருவில் நடந்து செல்லுகிறார். அவருக்கு எதிரில் மன்னனும் படைத் தளபதியும் வருகிறார்கள். அம்மணமாக நடந்து வரும் அவரைக் கண்டு அவர்கள் அருவருப்படைகிறார்கள்.

படைத் தளபதி அவர் மீது கோபங்கொண்டு அத்துறவியின் கையைத் துண்டித்து விடுகிறார். துண்டித்த கை கீழே விழுந்து கிடக்கிறது. ஆனால் அத்துறவியோ, எதையும் கண்டு கொள்ளாதவரைப் போல், அவர் போக்கில், அப்படியே அமைதியாக நடந்து போய்க் கொண்டிருந்தார்.

கையை வெட்டியதும், அவர் துடித்துப் போய் விடுவார் என எண்ணியிருந்த மன்னனும், தளபதியும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். அத்துறவி, ஒரு மகத்துவமுடையவராகத்தான் இருக்க வேண்டும் என



எண்ணி வருத்தப்பட்டார்கள். அத்துறவியிடம், சென்று மன்னிப்பு கோரினார்கள். ' எப்படிப் பரிகாரம் செய்வது, எப்படி வைத்தியம் செய்வது? ' என்று கோரினார்கள்.

வெட்டுப்பட்டு கீழே விழுந்த கையை எடுத்துக் கொண்டு வருமாறு அவர் கூறினார்.

அவர்களும் எடுத்து வந்தார்கள். அவர் அந்தக் கையை, வெட்டுப்பட்ட இடத்தில் வைத்ததும், கை மீண்டும் ஒன்றுபோல் சேர்ந்து கொண்டது.

இப்படி, ஆன்மீகத்துப் பெரியவர்கள் பற்றிய எத்தனையோ செய்திகள் நம்மிடையே உலா வந்து கொண்டிருக்கின்றன.

சமீபத்தில் கோவையில் நமது கூட்டம் ஒன்று ஏற்பாடாகியிருந்தது. ஆன்மீக நாட்டம் கொண்ட பலர் கலந்து கொண்டார்கள். கூட்டம் முடிந்த பிறகு, அன்பர் ஒருவர் தொடர்பு கொண்டு பேசினார்.

உடல் உபாதை எதுவோ அவருக்கு இருந்ததாகவும், கூட்டத்தில் கலந்து கொள்ள முடியாது என்ற எண்ணத்துடனேயே கூட்டத்தில் கலந்து கொண்டதாகவும், ஆனால் அப்படி, கூட்டத்திற்குள் நுழைந்த மாத்திரத்தில், அவருடைய உடல் உபாதையெல்லாம் நீங்கி விட்டதாகவும் கூறினார்.

'உங்களது விசேட சக்தியினால் அவரைக் குணமாக்கி விட்டீர்களோ?' என்ற பிரம்மிப்புணர்வுடன் அவர் நம்மிடம் அதனைக் கேட்டார்.

ஆனால் இத்தகைய அனுபவம் எதுவும் இதுவரை நமது கூட்டத்தில் நிகழ்ந்ததில்லை.

ஆனால் அப்படிப் பயன் பெற்றவர் பொய் கூறவில்லை. அவர் உண்மையானவர்; பண்பானவர்; ஆன்மீக நாட்டமுள்ளவர். ஆனால் அவர் முன்பின் நமக்கு அறிமுகமும் இல்லாதவர்.

அவரிடம் பின்வருமாறு கூற நேர்ந்தது.

*“நமது கருத்துக்களால் பலர் பயனடைந்துள்ளார்கள். நமது கருத்துக்களைப் புரிந்து கொண்ட நிலையில், பலருக்கு மனோ ரீதியான துன்பங்கள் அனைத்திலிருந்தும் விடுதலை கிடைத்துள்ளது. அதனால் சிலர் தங்களுடைய உடல் நோய்களிலிருந்து கூட விடுபட்டிருக்கிறார்கள். ஆனால் எல்லோருக்கும் இது நிகழவில்லை ....”*

*“இதுபோல் நமது அருகாமையில் வரும் பலருக்கு, ஆன்மீக அதிர்வுகள் ஏற்படுவதாகக் கூறுகின்றனர். இதனைப் பெரும்பாலானோர் கூறி விட்டனர். ஆனால் நம்மைப் பொருத்த வகையில், நாமாக எதுவும் செய்வதில்லை. பலரும் அப்படிக் கூறுவதால், அப்படி ஒரு நிகழ்வு ஏற்படுகிறது என்பதை நானும் தெரிந்து கொள்கிறேன் ....”*

*“தற்போது, நீங்கள் கூறிய அனுபவம் சற்றுப் புதியது. நானாக முயன்று எதுவும் செய்திருக்கவில்லை. நீங்கள் சொல்வதால், இப்படியொன்று நடந்திருக்கிறது என்பதை, நானும் உங்களைப் போல் தெரிந்து கொள்கிறேன்.”*



19

# அற்புதங்கள் சாதாரணமானவையே

ஒவ்வொருவருடைய மன இயக்கமும், சில அதிர்வலைகளைத் தோற்றுவித்துக் கொண்டுதான் இருக்கின்றன. அவைகள் சிலருக்கு சில வகையில், அவரவருடைய மன அலைவரிசைக்குத் தகுந்தவாறு பிரதிபலித்திருக்கலாம்.

அந்தப் பிரதிபலிப்புக்கு ஏற்ற விளைவுகளும் ஏற்பட்டிருக்கலாம்.

ஆனால் இவை எவையும், எல்லோருக்கும் ஏற்படும் பொது நிகழ்வாக அமைந்திருக்கவில்லை.

இதுபோன்ற ஆன்மீகக் கூட்டங்களில், இத்தகைய அற்புதங்கள் நிகழ்வதாக, பலவிதமான ஆன்மீக இயக்கங்களும் கூறிவருகின்றன.



எல்லாவிதமான ஆன்மீக இயக்கங்களும், நல்லெண்ணத்தை மட்டுமே கருத்தில் கொண்டு செயல்பட்டு வருகின்றன.

எல்லா இயக்கங்களும் நன்மையையே நாடி வருகின்றன. இதனால் இதுபோன்ற ஆன்மீக நிகழ்வுகளில், பலவிதமான தெய்வீகமான சக்திகளின் வெளிப்பாடுகளும், இயற்கையின் திட்டப்படி ஏற்படச் சாத்தியம் உண்டு.

அத்தகைய தெய்வீக சக்திகளின் தொடர்பு காரணமாகவும், இத்தகைய அதிசய நிகழ்வுகள் ஏற்படக் கூடும்.

பொதுவாகப் பார்க்கும் போது,

நாம் நிஷ்காமிய கர்மாவில் ஈடுபட்டு, தெய்வீகமாகச் செயல்படும் போது, இத்தகைய அற்புதங்கள் நம்மையறியாமலேயே ஏற்படும் வாய்ப்புண்டு.

ஞானிகளை எடுத்துக் கொண்டால்,

முற்காலத்தில் பலரும், துறவிகளாகவே இருந்துள்ளார்கள். அதனால் அவர்களுக்கு சமுதாய ரீதியான செயல்கள் எவையும் இல்லாமல் போய் விட்டன.

ஆனால் ஞான நிலையென்பதும், நிஷ்காமிய கர்மா என்பதும், துறவிகளுக்கு மட்டுமே ஏற்பட்ட ஒன்றல்ல. சராசரி மனிதனுங் கூட ஞானியாகலாம். ஞானியாக இருந்து, தனது உலகக் கடமைகள் அனைத்தையும் நிஷ்காமிய கர்மாவாகச் செய்திடலாம்.

ஞானம் பெற்ற ஒருவர் உலகக் கடமையாற்றும் போது, அவருக்கு எல்லாவிதமான உணர்ச்சிகளும் தேவைப்படும்.

அவர் உணர்ச்சியற்ற ஒருவராக மாறி விடும் பட்சத்தில், அவரால் எந்தக் கடமையையும் சரிவரச் செய்திட முடியாது.

புறச் செயலை நிர்வாகம் செய்திடும் வகைக்காக,

நமக்கு எல்லா வகையான உணர்ச்சிகளுமே தேவை.

ஆகவே உணர்வற்ற நிலை, உணர்ச்சியற்ற நிலை என்றெல்லாம் கூறி, நாம் நமது மனதைக் குழப்பிக் கொள்ளத் தேவையில்லை.

நமது மனதை, அதன் போக்கில் இயங்க அனுமதிக்கும் போது, அந்த மனதுக்கே, தன்னை எப்படி வைத்துக் கொள்ள வேண்டும் என்ற தெளிவு கிடைத்து விடுகிறது.

அதனால்,

தேவையான உணர்வுகள் மட்டும், தேவையான நேரத்தில், நமது புறச் சூழலை நிர்வாகம் செய்வதற்காக, அவ்வப்போது ஏற்படும்.

அப்படி வந்த உணர்வுகள்,

தாமாகவே தம்மைச் சீரமைத்துக் கொண்டு விடும்.



நல்ல உணர்வுகளைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டுமென்றோ, தீய உணர்வுகளை அப்புறப்படுத்த வேண்டுமென்றோ, நாம் நமது உணர்வுகளுடன் போராட வேண்டிய அவசியம் எதுவும் நமக்குக் கிடையாது.

அந்நிலையில்,

நாம் செய்யும் செயல்கள் அனைத்தும், நாம் செய்யும் செயல்களாக இருக்காது.

அவை அனைத்தும்,

தாமாக ஏற்படும் தற்செயல்களாகவே இருக்கும்.

நாமாக முயற்சி செய்வதுபோல் தோன்றினாலும்,

அது தாமாக ஏற்பட்ட முயற்சியாகவே இருக்கும்.

அந்நிலையில் அமைந்திருக்கும் கர்மாக்கள் அனைத்தும், நிஷ்காமிய கர்மாக்களாகும்.

நமது கர்மாக்கள் அனைத்தும், தெய்வீக கர்மாக்கள் ஆகும்.

தெய்வீக கர்மாக்களைச் செய்திடும் அனைவரும், தெய்வங்களே ஆவோம்.

தெய்வங்களையும் நம்மையும் இணைத்துப் பார்த்துக் குழம்பிக் கொள்ள வேண்டாம்.

நாம் தெய்வங்களாகி விட்டால், நமக்கு தெய்வீகமான சக்தியெல்லாம் கிடைத்து விடுமா என்றெல்லாம் ஆசைப்பட்டு விட வேண்டாம்.

நிஷ்காமிய கர்மாவுடன் செயல்படும் அனைவருமே தெய்வீக அம்சமுடையவர்களாகி விடுகிறோம்.

நாம் அடைய வேண்டிய உயர்ந்த நிலையே,

... இப்படி நிஷ்காமிய கர்மம் செய்யும் தகுதியுடையவர்களாக நாம் நம்மை உயர்த்திக் கொள்ளுவது மட்டுமே.

தெய்வீக சக்திகளும், சித்திகளும் இப்போது நமக்கு பிரம்மாண்டமாகத் தெரியலாம். ஆனால் அவை பிரம்மாண்டமானவைகளே அல்ல.

உண்மையான உயர்நிலை ... உண்மையான பிரமாண்டம், இந்த நிஷ்காமிய கர்மா மட்டுமே.

ஒருவர் நிஷ்காமியமாகச் செயல்படும் நிலையை அடைந்திடுவாரேயானால்,

பிறகு அவருக்கு எதுவுமே தேவையில்லை.

அவர் மட்டுமே, அனைத்தையும் அடைந்திடு வதாகக் கருதப்படுவார்.

இந்த நிஷ்காமிய கர்மாவைச் செயல்படுத்தும் அறிவு, நாம் நமது மனதைப் புரிந்து கொள்வதால் மட்டுமே ஏற்படுகின்றது.

இது நம்முடைய சொந்த மனதை,

நம்முடைய சொந்தமான முயற்சியில்,

திறந்த மனதுடன்,



அணுகுவதால் மட்டுமே சாத்தியம்.

மற்றபடி,

இந்த நிஷ்காமிய கார்மாவை,

எந்தத் தெய்வீக சக்தியாலுங்கூட நமக்குக் கொடுத்து விட முடியாது.

தெய்வீக சக்தியால் நமக்கு எதையாவது கொடுக்க முடிந்தால், அது நம்முடைய சஞ்சித கர்மாவிலிருந்து எதையாவது எடுத்துக் கொடுப்பதுதான். நிஷ்காமிய கர்மாவைக் கொடுக்கும் சக்தி, எந்தத் தெய்வத்துக்கும் கிடையாது. நமக்கு ஞானத்தை வழங்கும் சக்தி, எந்தத் தெய்வத்துக்கும் கிடையாது.

நிஷ்காமிய கர்மாவை அடைவது என்பது, நம்முடைய சொந்த முயற்சியால் மட்டுமே சாத்தியம்.





20

# மறுபிறவி உண்டா ?

ஆன்மீக உலகில் அடுத்ததாகக் கேட்கப்படும் கேள்வி இதுதான்.

"*மறுபிறவி உண்டா?*"

"*பிறப்பில்லா நிலையை அடைவது எவ்வாறு?*"

நம்முடைய சூட்சும உடல் என்பது, பிரபஞ்ச மனதால் ஆக்கப்பட்டது என்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம்.

நம்முடைய சூட்சும உடல்தான், தனக்குப் புதிது புதிதாக உடலை எடுத்துக் கொள்கிறது.

இதனால், புதிது புதிதாகப் பிறப்பெடுப்பது, நமது சூட்சும உடலுக்குச் சாத்தியமான ஓர் அம்சமாகிறது.

 

இந்தப் பிறவி தோறும் நிகழ்வதுதான், நம்முடைய கர்மாக்கள் என பார்த்தோம்.

பிறவிகள் பல உள்ளன என்னும் கருத்தை நாம், ஒரு நடைமுறை உண்மையாக எடுத்துக் கொண்டே நாம் இந்த ஆய்வில் ஈடுபட்டு வருவதால், இனி, பிறவி என ஒன்று உண்டா என்ற கேள்வியை ஆராய்ந்திடத் தேவையில்லை.

ஆனால் இந்தப் பிறவியின் நோக்கந்தான் என்ன? இந்தப் பிறவிகள் எப்போதுதான் நிறைவெய்துகின்றன? பிறப்பறுத்த நிலை என்றால் என்ன? மீண்டும் பிறப்பதற்கு என்ன காரணம்? மீண்டும் பிறக்காமல் இருக்க முடியுமா?

.... இதுபோன்ற அம்சங்களை, நாம் நமது ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளலாம்.

நமது மனதில் ஏற்படும் உணர்வுகள் யாவும், அவைபோக்கில் ஏற்படுகின்றன. நமது மனதில் ஏற்படும் அனைத்தும் செயல்களாக மாறி விடுவதில்லை.

நமக்குத் தேவையான உணர்வுகளை மட்டும், செயலுக்காக எடுத்துக் கொள்கிறோம். மற்ற உணர்வுகள் அனைத்தும் அங்கீகரிக்கப் படாத உணர்வுகளாக,

அவை, தாமாக மறைந்து விடுகின்றன.

நமக்கு ஏற்படும் உணர்வுகள் அனைத்தும்,

நாம் கொண்டு வராத நிலையில்,

அவை அனைத்தும்,

அவைபோக்கில்,

தாமாக ஏற்படுவதாக,

.... நாம் புரிந்து கொள்கிறோம்.

இதனால், நமக்கு ஏற்படும் எந்த உணர்வுகளையும், நாம் சொந்தம் கொண்டாடுவதில்லை.

நமக்கு ஏற்படும் உணர்வுகள் அனைத்தும், தாமாக ஏற்பட்டு,

தாமாக மறைந்து விடுகின்றன.

நாம் நமது வீட்டில் இருக்கிறோம். நமது தெருவில் கை வண்டியில் எத்தனையோ பொருட்களை, விற்பனைக்குக் கொண்டு செல்கிறார்கள்.

எத்தனையோ வண்டிகளில் அப்படிப் பொருட்களைக் கொண்டு செல்கிறார்கள். எந்த வண்டியில் நமக்குத் தேவையான பொருட்கள் வருகின்றனவோ, அந்த வண்டியை மட்டும் நாம் நிறுத்தி, நமக்குத் தேவையான பொருட்களை வாங்கிக் கொள்கிறோம்.

மற்ற வண்டிகளை நாம் கண்டு கொள்ளாததால், அவை அனைத்தும், அவைபோக்கில் அங்கிருந்து போய் விடுகின்றன.

நாம் அவற்றை அப்புறப்படுத்தத் தேவையில்லை.

 

இப்படி, நமக்கு ஏற்படும் அத்தனை உணர்வுகளும், ... அவை நல்லவையாக இருந்தாலும் சரி அல்லது தீயவைகளாக இருந்தாலும் சரி,

அவைபோக்கில் வந்து,

அவைபோக்கில் மறைந்து விடுகின்றன.

அவற்றை நாம், நெறிப்படுத்த வேண்டிய அவசியம் எதுவும் இல்லை.

*ஏனவே,* மனோரீதியாக,

*நாம் அடைய* வேண்டிய *இலக்கு* எதுவும் கிடையாது. அகத்தைப் பொருத்தவரையில், *நல்ல* அம்சம் என்றோ, கெட்ட அம்சம் என்றோ, எதுவும் கிடையாது.

அக உணர்வுகளின் வடிவாகத்தான்,

நமது, இன்ப - துன்பங்களும் அனுபவமாகின்றன.

ஆகவே,

இன்பத்தைத் தக்க வைத்துக் கொள்ளும் போராட்டமும், துன்பத்தை அப்புறப்படுத்தும் தீவிரமும், நம்மை விட்டுப் போய் விடுகின்றன.

நமது மனோ இயக்கம் முழுவதும் போராட்டமற்ற மனோ இயக்கமாகி விடுகிறது. நமது மனது,

தானே, தன்னை எதிர்த்துப் போராடும் சுய முரண்பாட்டை இழந்து விடுகிறது.

இதனால்,

நமது மன விருப்பத்துக்காகவோ,

இன்ப நாட்டத்துக்காகவோ செயல்படும் நமது இயக்கம் முடிவுக்கு வந்து விடுகிறது.

புறத் தேவைக்காக மட்டும்,

தர்ம நியாயங்களின் அடிப்படையில் செயல்படும் செயல் மட்டுமே, நமக்கு எஞ்சி இருக்கிறது.

இதே நிலைதான் மரணத்துக்குப் பின்னும் தொடர்கிறது.

இதனால்,

நம்முடைய இன்ப, துன்பங்களை அனுபவம் செய்வதற்காக,

நாம் கட்டாயமாக ... நிர்பந்தமாக, பிறப்பெடுக்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய் விடுகிறது.

இதனால் விடுதலை பெற்ற அனைவரது தர்மாக்களும், முடிந்து விட்டன என்று பொருளில்லை.

அந்தக் கர்மாக்கள் எஞ்சியிருந்தாலும் கூட,

அவை எதுவும், நம்மைக் கட்டாயப்படுத்தி,

நம்மைப் பிறப்பெடுக்க வைப்பதில்லை.

அந்நிலையில்,

சமுதாயத்தின் நன்மை கருதி,



நாமாக விரும்பி,

நமது கர்மாக்களின் காரணமாக, ஒரு பிறப்பை எடுத்துக் கொள்ளலாம்.

விடுதலை பெறாதவர்கள் நிர்பந்தமாகப் பிறப்பெடுக்கிறார்கள். விடுதலை பெற்றவர்கள் தேவைப்பட்டால் பிறப்பெடுக்கிறார்கள்.

அப்படி விடுதலை பெற்றவர்கள் பிறப்பெடுக்கும் போது, தங்கள் பிறப்பை, தங்களது கர்மாக்களுக்கு ஏற்பவும்,

தாங்கள் ஆற்ற வேண்டிய செயல்களுக்கு ஏற்பவும், திட்டமிட்டுக் கொள்ளுகிறார்கள்.





## 21

# முற்பிறவி

*"உங்கள் பிறப்பைப் பற்றிய உண்மை என்ன? உங்களுடைய முற்பிறப்பு பற்றி உங்களுக்குத் தெரியுமா?"*

... இப்படிச் சிலர் கேள்விகளை எழுப்பியுள்ளார்கள்.

*"சிலருக்கு தீர்க்க தரிசன சக்தி உள்ளது. அதன் மூலம் அவர்கள் ஒருவரது பிறவி இரகசியங்களைக் கூட கூறிவிடுகின்றனர் ..."*

*"ஆனால் எனக்கு அத்தகைய சக்திகள் எவையும் கிடையாது. அதனால் என்னைப் பற்றிக் கூட ... எனது முற்பிறவி பற்றிக் கூட, எனக்கு எதுவும் தெரியாது."*



இப்படித்தான் பதிலளித்து வந்தேன். இதுதான் என்னைப் பற்றிய யதார்த்த உண்மை. 'என்னைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொண்டும், நான் வேண்டுமென்றே எனது முற்பிறவியின் இரகசியத்தை மறைத்து விட்டேன்' என்ற நிலை எதுவும் எனக்குக் கிடையாது.

ஒரு சராசரி மனிதனாகவே பிறப்பெடுத்து, ஒரு சராசரி மனிதனுக்குரிய எல்லாவிதமான நல்ல இயல்புகளோடும், கெட்ட இயல்புகளோடும் தான் வாழத் துவங்கினேன்.

ஒரு சராசரி மனிதன் செய்யும் சராசரியான தவறுகளையும், நல்ல செயல்களையும்தான் நானும் செய்துள்ளேன்.

ஒரு சராசரி மனிதனுக்கு ஏற்படும் வெற்றி தோல்விகள்தாம் எனது வாழ்விலும் ஏற்பட்டுள்ளன.

ஒரு சராசரி மனிதனைப் போன்றே, ஆன்மீகத்திலும் நுழைந்து ஆன்மீகத் தேடுதல்களில் ஈடுபட்டேன். ஒரு சராசரி மனிதன் சந்திக்கும் அத்தனை தோல்விகளும் எனது ஆன்மீக முயற்சிகளில் ஏற்பட்டன.

ஆன்மீக அனுஷ்டானங்களில் ஈடுபட்டாலும், சித்துக்களையும் சக்திகளையும் பெறுவதில் எனக்கு ஒருபோதும் நாட்டம் இருந்ததில்லை. ஞானத்தை அடைவதில் மட்டுமே ஆர்வம் காட்டி வந்தேன். அதனால் ஞானத்தைப் போதிப்பவர்களை மட்டுமே தேடி, அவர்களது வழிகாட்டுதல்களில் மட்டுமே கவனம் செலுத்தி வந்தேன்.

அதனால் அதீதமான ஆற்றல் உள்ளவர்களின் தொடர்பு எதுவும் எனக்குக் கிடைக்கவில்லை. அவர்களைத் தேடி அலைந்திடவும் இல்லை. ஞானத் தெளிவு பெறும் வரை, அத்தகைய நிலையிலுள்ளவர்கள் எவரையுமே எனக்குத் தெரியாது.

அத்தகைய ஆற்றல் உள்ளவர்களின் தொடர்பு, தற்போதைய நிலையில்தான் ஏற்பட்டுள்ளது. அப்படித் தீர்க்க தரிசன சக்தி உள்ளவர்களின் தொடர்பு கிடைத்த நிலையில், அவர்களாக முன்வந்து, எனது முற்பிறவி பற்றிக் கூறுகிறார்கள். அவர்களில் பலரும், ஒரேவிதமான செய்தியைக் கூறுவதால், அதையும் நம்பிக்கைக்கு உகந்ததாக எடுத்துக் கொள்ளத்தான் வேண்டியுள்ளது.

சிறுவயதில் மாணவனாக இருந்தபோது, நாங்கள் எவராவது பள்ளிக்கு வராமல் இருந்தால், வேடிக்கையாக இப்படிக் கூறிக் கொள்வோம்: "*எனக்கு காய்ச்சல் என்று, எனது அம்மா கூறினார்கள். ஆதனால்தான் பள்ளிக்கு வரவில்லை.*"

காய்ச்சல் என்றால், நமக்குத் தெரியாதா என்ன?

ஆனால் எனது முற்பிறவி பற்றி, இன்றுவரை நேர்முகமாக எனக்கு எதுவும் தெரியாது.

ஆனால் என்னைப் பற்றிய தரிசனங்களை உடையவர்கள் அனைவரும் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். நம்மைப் பற்றி எதையாவது கூறி ஆதாயம் தேடிக் கொள்ள வேண்டிய நிலையில்



இல்லாதவர்கள். ஆனாலுங்கூட அவர்களுடைய தரிசனத்தை என்னுடைய தரப்பு உண்மையாக எடுத்துக் கூறவும் நான் தயாராக இல்லை.

அவர்கள் என்னைப் பற்றிக் கூறியதை, வெளிப்படையாகக் கூற முடியாததற்கு வேறு சில காரணங்களும் உள்ளன.

எனது கருத்து சரியா, தவறா என்று கூற முடியாது. ஆனாலும் எனக்கு இப்படி ஒரு கருத்து உண்டு. அதாவது, '*ஒருவன் பிறவியிலேயே ஞானியாகப் பிறந்துள்ளான் என்பதில், எந்தச் சிறப்பும் கிடையாது. அவன் ஒரு சராசரி மனிதனாக இருந்து, அவனுடைய சொந்த முயற்சியினால் அவன் ஞானத்தைப் பெறுவதுதான் சிறப்பானது.*' ..... என்பதுதான் எனது கருத்தாக இருந்தது.

இன்னுமொரு காரணமும் உண்டு.

இது சம்பந்தமான ஒரு வேடிக்கைக் கதையைக் கூறுவார்கள்.

ஒருவனை மரத்தோடு சேர்த்து கட்டி வைத்திருந்தார்கள். அவன் தன்னைக் கட்டி வைத்திருந்தவர்கள் மீதெல்லாம் சாபம் கொடுத்துக் கொண்டிருந்தான்.

"*நான் இறைதூதன் என்று எவ்வளவு தூரம் சொல்லியும் நீங்கள் கேட்பதாயில்லை. நான் இறைதூதன் என்பதை நம்பாமல் என்னை இப்படிக் கட்டி வைத்திருக்கிறீர்கள். இருந்தாலும் பரவாயில்லை. நான்*

*இப்படி இருந்தபடியே உங்களுக்கு உபதேசம் செய்கிறேன். எல்லோரும் என் முன்பு வந்து உட்காருங்கள். இல்லாவிட்டால் நீங்கள் அனைவரும் நரகத்துக்குத்தான் போய் விடுவீர்கள்!"*

அவனுக்குப் பின்னால் இருந்து, இன்னுமொரு குரல், இன்னும் சப்தமாக ஒலித்துக் கொண்டிருந்தது.

"*அவனை நம்பாதீர்கள்! அவன் இறைதூதன் அல்ல. அவன் பொய் சொல்லுகிறான். எனது தூதனாக நான் அவனை அனுப்பவில்லை!"*

... இப்படி அந்தக் குரல் கூறிக்கொண்டிருந்தது. அந்தக் குரலுக்கு உரிமையானவன் இன்னுமொரு மரத்தில் கட்டி வைக்கப்பட்டிருந்தான்.

இப்படி, சிலர் தங்களை இறைவனாகவோ அல்லது இறைவனின் தூதுவனாகவோ எண்ணிக் கொண்டு காமெடி செய்வது,

வெறும் கற்பனைக் கதையாக இருந்தால் பரவாயில்லை. உண்மையாகவே அப்படி நடந்து கொள்கிறார்கள்.

அப்படி நடந்து கொள்பவர்கள் எங்கேயோ, நமக்குத் தெரியாத இடத்தில் நடந்து விட்டால் கூட பராவாயில்லை. நம்முடனேயே இருப்பவர்கள் அப்படி நடந்து கொள்ளும் போது என்ன செய்வது?

என்னுடைய ஆரம்பகால ஆன்ம சாதனையின் போது, அன்பர் ஒருவர் என்னுடன் நெருங்கிப் பழகி வந்தார்.



சாஸ்திரங்கள் அனைத்தையும் கரைத்துக் குடித்தவர் என்று கூட அவரைச் சொல்லலாம். ஆனால் அவர், வார்த்தைக்கு வார்த்தை தன்னைப் பற்றி, இப்படித்தான் கூறுவார். "*நான் இந்த உலகத்தை ஆளப்போகிறேன். இந்த உலகத்துக்கே நான் சக்கரவர்த்தியாகி விடுவேன். எந்த நிமிடத்திலும் என்னுடைய அபூர்வ சக்தி வெளிப்பட்டு விடும்.*"

.... இப்படி அவர் முப்பது வருடங்களாக அவரைப் பற்றிக் கூறிக் கொண்டிருக்கிறார்.

நண்பர்தான் இப்படியென்றால், எனது நெருங்கிய உறவு வட்டத்திலுங் கூட இத்தகைய செயல் பாடுள்ளவர்களையும் பார்க்க நேர்ந்தது.

இந்நிலையில், தற்போது சிலர், என்னைப் பற்றிக் கூறும் தீர்க்க தரிசனங்களும் அதைப் போன்ற செய்திகளும் ஒன்றாகவே அமைந்து விட்டதால், அதை வெளிப்படையாகக் கூறிப் பேசுவதற்குக் கூட நெருடலாக உள்ளது.

ஆனாலும், இந்த நூலோடு தொடர்புடைய செய்தியாக இருக்கும் ஒரே காரணத்தினால் அதைப் பற்றியும் தெரிவிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது.

எனது முற்பிறவியில் நான் ஆன்மீகத்தோடு தொடர்புடைய **A** என்ற நபராக இருந்ததாக ஒருவருக்கு தீர்க்க தரிசனம் ஏற்பட்டது. அப்படி ஏற்பட்ட தீர்க்க தரிசனத்தை, அதைப் போன்ற சக்தியுள்ள சிலரும், அதையே கூறி உறுதி செய்து விட்டார்கள்.

இந்நிலையில் நம்முடைய கருத்துக்களினால் தெளிவு பெற்ற மருத்துவர் ஒருவருக்கு அவர் என்னைச் சந்திப்பதற்கு முன்னால்,

**B** என்ற மகான் ஒருவர், அந்த மருத்துவரின் கைகளைப் பிடித்து கூட்டிச் சென்றதாக கனவொன்று ஏற்பட்டுள்ளது. அந்த மருத்துவர் குழந்தையாக இருக்கும் போது, அவரை வளர்த்து வந்த ஒருவருக்கும் அதே போன்ற கனவொன்று ஏற்பட்டுள்ளது. அவரும் அந்த **B** மகானிடம், " இவனுடைய பெற்றோர்கள் இருவரும், இவனை என்னைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு வேலைக்குப் போயிருக்கிறார்கள். நீங்கள் இப்படிக் கூட்டிச் செல்லுகிறீர்களே சுவாமி?" என்று அந்தக் கனவில் கேட்டிருக்கிறார்.

"*இனி நான் அவனைப் பார்த்துக் கொள்கிறேன்*" என்று சொல்லி அந்த **B** மகானும் கூட்டிச் சென்று விட்டார்.

அந்த மருத்துவர் நமது கருத்துக்களால் தெளிவடைந்த நிலையில், **B** என்பவர் ஏன் வந்தார் என்ற கேள்வியுடன் இருந்து வந்தார். இன்னுமொரு குருநாதர் எவரோ இதற்குப் பிறகும் வரப் போகிறார் போலும் என்ற எண்ணத்துடன் இருந்து வந்தார்.

இந்நிலையில் என்னைப் பற்றிய தீர்க்க தரிசனம் கூறியவரிடம், அது பற்றிய விபரங்களைக் கேட்ட போது, அவர் அது பற்றித் தெளிவு படுத்தியுள்ளார். அதாவது, **A** என்பவர்தான் அடுத்த பிறவியில் **B** ஆக வந்துள்ளதாகக் கூறியிருக்கிறார்.



ஆனால் **B** என்பவரின் வாழ்க்கை வரலாற்றைப் பார்க்கும் போது, அவர் **A** என்பவரை வணங்கி வந்ததாகத் தெரிகிறது.

அது பற்றி விளக்கம் கேட்கும் போது, **B** என்பவருக்கு, தான்தான் **A** என்பவரின் மறுபிறவி என்பது தெரியாமல் மறைக்கப்பட்டிருந்திருக்கிறது என்று விளக்கம் கொடுத்துள்ளார்.

மற்றைய பலரும் நம்மை **A** என்பவரோடு மட்டுமே தொடர்புபடுத்தி தரிசனங்களைக் கண்டுள்ளனர். ஒரு நபருக்கு மட்டுமே, **A** மற்றும் **B** என்பவர்கள் ஒருவரே எனத் தோன்றியுள்ளது.

இத்தகைய தீர்க்க தரிசனங்கள் பற்றிய செய்திகள், எனது தெளிவு நிலைக்கு முன்னமே எனக்குக் கிடைத்திருக்கும் பட்சத்தில், அது என்னைப் பொருத்த வரையிலும் முக்கியத்துவம் உடையதாக இருந்திருக்கலாம்.

ஆனால் தெளிவு பெற்ற நிலையில்,

நமக்கு முற்பிறவி மற்றும் பிற்பிறவி அனைத்துமே முக்கியத்துவம் இழந்து விடுகின்றது.

அதனால் **A** மற்றும் **B** என்பது, எவரைக் குறிக்கிறது என்று குழம்பிக் கொள்ள வேண்டாம். தீர்க்க தரிசனங்கள் உண்மையாக இருந்தாலும் ஒன்றுதான்; பொய்யாக இருந்தாலும் ஒன்றுதான்.

ஞானத் தெளிவு மட்டுமே முக்கியமானது.

இந்த ஞானத் தெளிவை வழங்கும் சக்தி, தெய்வங்களுக்குக் கூட கிடையாது.

ஏனெனில், ஞானத் தெளிவு என்பது ஒரு சக்தி மிக்க அடைவு நிலை அல்ல.

நமது அறிவின் ... மனதின், இயலாமையைப் புரிந்து கொள்வதுதான் இந்த ஞானத் தெளிவு ஆகும்.

நம்முடைய இயலாமையை ... மனோ ரீதியான இயலாமையைப் புரிந்து கொள்ளும் நிலையில்,

நமது மனதே வேறு பரமாணத்தில் இயங்கி,

நம் அனைவரையுமே,

நடமாடும் தெய்வங்களாக்கி விடுகின்றது.

**A** மற்றும் **B** என்பவர்கள் யார் என்பதைக் கண்டு கொள்ள அக்கறை எடுக்காமல்,

இந்த **C** என்ன கூறுகிறார் என்பதை மட்டும், உங்களுக்குள் எடுத்துக் கொள்வதுதான் முக்கியமானது.

நாம் பரிசீலித்துப் பார்க்கக் கூடிய உண்மைகளை மட்டும் கவனத்துக்கு எடுத்துக் கொண்டால் போதுமானது.

அமானுஷ்ய செய்திகளை நம்மால் பரிசீலித்துப் பார்க்க முடியாது. அவை நமது நடைமுறை செயல்பாட்டுக்கு எந்த வகையிலும் உதவி புரியப் போவதில்லை.

 

கர்மா, கர்மவினை, பிறவிகள், பாவ புண்ணியங்கள் ஆகியவை அனைத்தும் நம்மால் பரிசீலித்துப் பார்க்க முடியாத நிலையிலேயே அமைந்துள்ளன.

அவற்றில் கிடைக்கும் உள்ளாந்த செய்திகளை மட்டும் தெரிந்து கொள்வதே நமக்குப் போதும்.

நமக்கு ஏற்பட்ட பிராரப்தம் என்னும் சந்தர்ப்பங்கள் அனைத்தையும்,

நன்மை மிகுந்த ஆகாமிய கர்மங்களாக எதிர் கொண்டு,

தேர்ச்சி பெற்ற நிலையில்,

நிஷ்காமிய கர்மத்தில்,

நாம் அனைவருமே நிலை கொள்வோமாக.

●

சுபம்





## ஐயா அவர்களின் நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஞானவிடுதலை | ரூ. 50/- |
| 2. | கவலைகளுக்கெல்லாம் தீர்வு | ரூ. 70/- |
| 3. | ஞானமலர்வு | ரூ. 10/- |
| 4. | தியானத்தை விடு ! ஞானத்தைப்பெறு ! (நர்மதா பதிப்பகம்) | ரூ. 90/- |
| 5. | சும்மா இரு | ரூ. 30/- |
| 6. | நான் யார் ? | ரூ. 20/- |
| 7. | சூனியப்பிரவாஹம் | ரூ. 70/- |
| 8. | ஞானப் பட்டறை | ரூ. 60/- |
| 9. | ஆன்மாவை துறந்து ஆன்மாவாக இரு | ரூ. 60/- |
| 10. | தேடிப்போக வீடு இல்லை ! | ரூ. 30/- |
| 11. | நீங்களும் ஞானியாகலாம் | ரூ. 30/- |
| 12. | ஸ்ரீ பகவத் பார்வையில் ஜென் கதைகள் | ரூ. 40/- |
| 13. | சத் தரிசனம் | ரூ. 60/- |

## முற்கால நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஆன்மஞான ரகசியம் | ரூ. 30/- |
| 2. | அனுஷ்டான ஆன்மீகம் | ரூ. 120/- |

## English Books

1. Don't Delay Enlightenment — Rs. 100/-
2. Give up Meditation ! Get Enlightenment !
3. Renounce God ! Be God !

## Audio Books

| | | |
|---|---|---|
| 1. | ஞானவிடுதலை | Rs. 150/- |
| 2. | நீங்களும் ஞானியாகலாம் | Rs. 100/- |
| 3. | Don't Delay Enlightenment | Rs. 150/- |

ஸ்ரீ பகவத் அவர்களின் உரை ஆடியோ சி. டி யிலும் கிடைக்கும்

## நூல்களைப் பெற

சேலம் : அஜந்தா புக் சென்டர் ✆ : 0427 - 2417755
வள்ளலார் புக் ஷாப் ✆ : 93611 24798
திரு. R. முருகேசன், இராசிபுரம். ✆ : 97875 37631, 94886 94459
திரு. N. கைலாசம், அழகாபுரம். ✆ : 94432 90559
திரு. V.A.P. சரவணன், அம்மாப்பேட்டை. ✆ : 99942 05880

திருச்சி : Zen Sangh அக நூலகம் ✆ : 0431 -2701239, 98940 12639
இன்டர்நேஷனல் புக்ஸ் ✆ : 0431 -2703743, 2711599

திண்டுக்கல் : வாழ்க வளமுடன் புத்அக மையம் ✆ : 0451-2423311

சென்னை : ஸ்ரீவித்யா புக் சென்டர், மைலாப்பூர்.
✆ : 044 - 24611345, 24511141
முரளி பப்ளிகேஷன், ✆ : 94440 50089, 044 - 24350089
Er. திரு. பார்த்தசாரதி ✆ : 98416 96499

கோவை : விஜயா பதிப்பகம் ✆ : 0422 - 2394614, 2382614

திருவண்ணாமலை : ஸ்ரீசேஷாத்திரி சுவாமிகள் ஆசிரமம்
திரு. ரங்கராஜன் ✆ : 94434 23495

மதுரை : சர்வோதய இலக்கிய பண்ணை ✆ : 0452 - 2341746
Dr. R. சரவணகுமார், கே.கே. நகர். ✆ : 94434 71456

கும்பகோணம் : புத்தக பூங்கா ✆ : 0435 - 2425252

திருநெல்வேலி : அருள் நந்தி சிவம் ✆ : 0462 - 2339692
ஈகிள் புக் ஸ்டோர் ✆ : 0462 - 2578899

தூத்துக்குடி : ஈகிள் புக் ஸ்டோர் ✆ : 0461 - 2392333

பரமத்திவேலூர் : திரு. M.A. மோகன் ✆ : 92454 40575

தஞ்சை : திரு. T.K. சதானந்தன், ரெய்கி மாஸ்டர் ✆ : 98947 26162

திருப்பூர் : திரு. தண்டபாணி ✆ : 92453 92945, 81220 10290
வையகம் இயற்கை அங்காடி
திரு. மு. கதிர்முருகன் ✆ : 98422 73433
திரு. அருள்பிரகாசம் ✆ : 99440 44988



கர்மவினை, பாவ புண்ணியம் உண்டா?
கிரகங்களுக்கு சக்தி உண்டா?
விதியை வெல்ல முடியுமா?

இவை அனைத்துக்கும் அறிவியல் பூர்வமான விளக்கமும், தேவையான தீர்வையும் கொடுத்து தன்னம்பிக்கையை வழங்குகிறது இந்நூல்.




Published by
NITHYA PRAVAAHAM PUBLICATION
31,Ramalinga Samy Street, Ammapet, Salem - 636 003.
Tamilnadu, (INDIA). Cell : 97 89 16 55 55.
www.nithyapravaaham.org